IV—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. SPEAKER: The hon. Member, Sri N. K. Palanisami spoke for five minutes only on the previous day. He will resume his speech now.

SRI N. K. PALANISAMI: கனம் சபாநாயகர் அவர்களே, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம் சர்க்கார் 4 ரயில்வேக் களைத்தான் எடுத்துக்கொள்ள முடிந்தது. 'ஓவர் பிரிட்ஜ்' ஸப்-வேஸ்' போன்றவைகளெல்லாம் பல வருஷங்களாக கட்டப்படாமல் இருக்கின்றன. உதாரணமாக, ஹைகோர்ட்டிற்குப் பக்கத்தில் ஓவர் பிரிட்ஜ் கட்டுவதுபற்றி 8 வருஷங்களாக இந்தச் சபையிலே பேசிக்கொண்டிருக்கிருேம். அது இன்னும் பரிசிலனையில்தான் இருக்கிறது. எல்லா ராஜ்ய சர்க்கார்களும் அந்தந்த ராஜ்யங் களில் எந்தெந்த இடங்களில் ஓவர் பிரிட்ஜ் வேண்டும், எந்தெந்த இடங்களில் 'ஸப்-வேஸ்' வேண்டும் என்று மத்திய சர்க்காரிடம் லிஸ்டு கொடுத்திருக்கிருர்கள். ஆனல், நம் சர்க்கார் எவ்வளவோ திறமையான சர்க்கார் என்று சொல்லப்பட்ட போதிலும், மந்திரிகள் திறமைசாலிகளாக இருந்தபோதிலும் அம்மாதிரி ஒரு லிஸ்டு மத்திய சர்க்காருக்கு இன்னும் கொடுக்கவில்லை. அம்மாதிரி கொடுக்காமல் இருப்பதற்கு என்ன காரணம் என்று நான் கேட்க விரும்புகிறேன்.

எல்லா மாகாணங்களையும் விட நம் மாகாணம் திட்டங்களை நிறைவேற்றுவதிலே முதன்மையாக இருக்கிறது என்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. ஆனல் பொதுத் துறையில் மட்டும் எல்லா மாகாணங்களையும் விட நாம் பிற்போக்கான நிலையில் இருக்கிருேம். பொதுத் துறையில் எடுத்துக்கொண்டால், மைசூரில் பத்ராவதி ஸ்டீல் வொர்க்ஸ் இருக்கிறது, ஹிந்துஸ்தான் டூல்ஸ் இருக்கிறது. இன்னும் பாம்பேயை எடுத்துக்கொண்டால் டெக்ஸ் டைல் மில் இருக்கிறது. அங்கு ஒரு டெக்ஸ்டைல் மில்லை மாகாண சர்க்காரே நடத்திவருகிருர்கள். இன்னும் அஸ்ஸாமை எடுத்துக் கொண்டால் எண்ணெய் சுத்திகரிப்பு சாலை அங்கே இருக்கிறது. நாமும் அம்மாதிரி ஒரு திட்டம் வேண்டும் என்று சொன்னேம். ஆனல் நடைமுறையிலே வரவில்லை. பாக்கி இருக்கக்கூடிய மாகாணங்களில் பொதுத் துறையில் பல தொழில்கள் நடக்கும் பொழுது, நம் சர்க்கார் அடிப்படையாக இருக்கக்கூடிய தொழில் களைக்கூட தனிப்பட்டோர் கையில் விடுவதற்குக் காரணம் என்ன? நம் சர்க்கார் தொழில் மந்திரி அவர்கள் இன்னும் 2½ கோடி ரூபாய் கையில் இருந்தால் எவ்வளவோ தொழில்களை ஏற்படுத்த முடியும் என்று சொன்னர்கள். ஆனல் பணம் இல்லை என்று சொன்னர்கள். இம்மாதிரி தொழில்கள் தனிப்பட்டோர் கையில் போவதால்தான் ஒரு நெருக்கடி வருகிறது.

THE HON. SRI R. VENKATARAMAN: இன்னும் ரூ. 5 கோடி அதிகமாக இருந்தால் தனியார் துறையிலே இண்டஸ்டிரீஸ் வைக்க முடியும் என்றுதான் சொன்னேன்.

23rd January 1961]

**Sri N. K. PALANISAMI :** இன்று அலுமினியம் 'பேஸிக் இண்டஸ்டரி' தனிப்பட்டோர் கையில் விடப்பட்டிருக்கிறது. அது மாத்திரமல்ல. 'கோக் ஓவன் பிளாண்டு' கூட தனியார் துறையிலே வரப்போகிறது என்று சொல்லப்படுகிறது. இது 1957-வது வருஷத்திய இந்திய சர்க்கார் கொள்கைக்கு நேர் விரோதம் அல்லவா ? பொதுத் துறையை எடுத்துக்கொண்டால், இன்று நெய்வேலித் திட்டமும், 'இன்டக்ரல் கோச் பாக்டரியும்' தான் இருக்கிறது. இது முடிந்த பிறகு பொதுத்துறை ஒரு பூஜ்யம் ஆகிவிடும். பொதுத் துறை மிகவும் அவசியம். இதன் காரணமாக சர்க்காருக்கு ஒரு 'காரண்மெட் காபிடல் இன்கம்' ஏற்படுகிறது. இன்றையதினம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 'இண்டர்னல் ரிஸோர்ஸஸ்' எப்படி சேகரிப்பது என்ற முறையிலே யோசனை செய்கிறுர்கள். இன்னும் பாசன வசதி பெறக் கூடிய நிலங்களுக்கு அதிகப்படியான வரி போடுவது என்ற ஒரு யோசனையை பத்திரிகையிலே பார்த்தோம். ஏற்கெனவே விவசாயிகளுக்கு இருக்கக்கூடிய கஷ்டம் ஒரு பக்கம் இருக்கிறது. ஏற்கனவே அவர்களுக்கு தாங்கமுடியாத வரிச்சுமை இருக்கும் பொழுது மறுபடியும் 'இண்டர்னல் ரிஸோர்ஸஸ்' சேகரிப்பதற்காக விவசாயிகளிடம் வரி போட்டு வாங்குவது என்ருல் தண்டிப்பாக இந்த மாகாணத்திலுள்ள விவசாயிகள் அம்மாதிரி போடக்கூடிய வரியை எதிர்ப்பார்கள். இம்மாதிரி வரி போடுவதற்கு அவசியமே இல்லை. சர்க்காருக்கு நிரந்தர வருமானம் வருகிறதென்ருல் அதை வைத்துக்கொண்டு எவ்வளவோ செய்ய முடியும். இன்னும் மதராஸ் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கார்ப்பரேஷன் இருக்கிறது. தனிப்பட்டவர் தொழில்களுக்கெல்லாம் உதவி கொடுத்து, தொழில்களை வளரச் செய்கிறது. மதராஸ் 'இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கார்ப்பரேஷன்' என்பதற்கு பதிலாக, தனியார் கார்ப்பரேஷன் என்றே சொல்லி விடலாம். பொது மக்களுடைய வரிப் பணத்தையெல்லாம் கொடுத்து ஒரு கார்ப்பரேஷன் ஏற்படுத்தி தனியார்களுக்கு உதவி செய்து தொழில்களை வளர்ப்பதால் யாருக்கு ஏராள லாபம் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** வரிப் பணத்திலிருந்து மதராஸ் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கார்ப்பரேஷனுக்கு ஒரு பைசா கூட கொடுப்பது இல்லை.

**Sri N. K. PALANISAMI :** இப்படி தனியார் தொழில்களை நடத்தும்படி விடுவது ஒரு ஆபத்தான விஷயம். சிந்திரி பெர்டிலைஸர்ஸ், பிலாய், ரூர்கேலா போன்ற உருக்குத் தொழிற்சாலைகள் இருக்கின்றன. இப்பொழுது பிற்போக்கு வாதிகளின் கிளர்ச்சியின் காரணமாக மத்திய பார்லிமெண்டு எஸ்டிமேட் கமிட்டி 1958, 1959-ம் வருஷங்களில் இம்மாதிரி சர்க்கார் நடத்தக்கூடிய துறைகளில் 20 சதவிகிதம் பங்குகளை பொது மக்களுக்கு விட வேண்டும் என்று சிபார்சு செய்திருக்கிறது. அதே சமயத்தில் திட்டக் கமிஷனும் அந்தச் சிபார்சை ஏற்றுக்கொண்டிருக்கிறது. சர்க்கார் பொதுத் துறையிலே செலவிடும்பொழுது சர்க்காருக்கு

ஏராளமான கஷ்டம் ஏற்படுகிறது. இப்பொழுதுதான் முந்திரா ஊழல்களெல்லாம் நிவர்த்தி செய்யப்பட்டு ஓரளவுக்கு லாபம் வரக்கூடிய நிலைமை ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. அப்படியிருக்கும் பொழுது 20 சதவிகிதம் பங்குகளை 'பப்ளிக்குக்கு' விடுவதற்கு என்ன காரணம்? அப்படி 20 சதவிகிதம் பங்குகளை 'பப்ளிக்குக்கு' விட்டால், டாடா, பிர்லா போன்ற முதலாளிகள் அந்த ஷேர்களை வாங்கிவிடுவார்கள். 'நாஷனலைஸ்டு ஸெக்டரை' 'டி-நாஷனலைஸ்' பண்ணவேண்டும் என்று சொல்கிறார்கள். இப்படிப்பட்ட நிலைமையைத் திட்டக் கமிஷனும் ஏற்றுக்கொள்ளக்கூடிய சமயத்தில், நம் சர்க்கார் ஏன் அதை வன்மையாகக் கண்டிக்கவில்லை. 'ஹெவி இண்டஸ்ட்ரீஸ்' தனிப்பட்டவர்கள் கையில் இருப்பதன் காரணமாக, சர்க்கார் அவர்களுக்கு அதிகமாக ஆதரவு தருவதின் காரணமாக நாட்டில் ஒரு பெரிய பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக மூன்று தொழில்களுக்கு வேண்டிய நிலக்கரி கிடைக்காததன் காரணம் என்ன? இந்த நிலக்கரித் தொழில் தனிப்பட்டோர் கையில் இருப்பதால் அவர்கள் இஷ்டம்போல் நடக்கவேண்டும் என்று சொல்லுகிறார்கள் அந்த முதலாளிகள். ஆகவே, அவர்கள் உற்பத்தியை குறைத்துவிட்டார்கள். இந்தியாவிலுள்ள பாங்குகளெல்லாம் ஆட்டம் கண்டு போயிருக்கிறது. நம் மாகாணத்திலுள்ள பாங்குகளும் இதற்கு விதி விலக்கு அல்ல.

• • • •

• • • •

நாம் எவ்வளவோ திட்டங்கள் போட்டிருக்கிறோம். இருந்த போதிலும் இம்மாதிரியான ஒரு நிலைமை ஏற்படுவதற்கு காரணம் பொதுத் துறையை ஆதரிக்காததுதான். ஆகவே இம்மாதிரி ஆபத்தான நிலைமைக்கு போகக்கூடாது என்று சொல்லி, அதை வன்மையாக கண்டிக்கிறேன். நாம் பெற்றுள்ள ஜனநாயக உரிமை எப்படி நம்மை பாதித்து வருகிறது என்பதற்கு பல உதாரணங்கள் சொல்லலாம். பஞ்சாயத்துகளுக்கு உதவி செய்வதிலிருந்து பப்ளிக் சர்வீஸ் கமிஷன் அங்கத்தினர்கள் நியமிக்கும் விதத்தைப் பார்த்தால், இன்றைய தினம் காங்கிரஸ் கட்சியிலே சேர்ந்தால்தான் எல்லாம் கிடைக்கும் என்ற மனோபாவம் பரவி வருகிறது. பப்ளிக் சர்வீஸ் கமிஷனை எடுத்துக் கொண்டால், இன்றைய தினம் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள். ஏதாவது உத்யோகம் வேண்டுமென்றால், காங்கிரஸ் மூலமாக வேண்டியதைச் செய்துகொள்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு காங்கிரஸ்காரருக்கு பஸ் பெர்மிட் கொடுக்க கலெக்டர் மறுத்ததற்காக அவரை அந்த ஜில்லாவைவிட்டு மாற்ற வேண்டுமென்று ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தீர்மானம் போட்டு அனுப்பி இருக்கிறார்கள். என் தொகுதியில் ஒரு காங்கிரஸ்காரர் அல்லாதவருக்கு அங்கேயுள்ள தாசில்தார் ஸ்தல அபிவிருத்தி திட்ட வேலைக்காக ஒரு காண்டிராக்ட் கொடுத்ததற்காக, அவர் மேல் "என்குயரி" செய்யவேண்டுமென்று சொல்லி அவரை மாற்றி விட்டார்கள். காங்கிரஸ்காரர்களுக்கு 80 கிணறுகளும்,

* Expunged as ordered by the Chair.

23rd January 1961] [Sri N. K. Palanisami]

காங்கிரஸ்காரர் அல்லாதவர்களுக்கு 40 கிணறுகளும் கொடுத்தும் கூட அவர்மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்து அவரை மாற்றி விட்டார்கள். ஈரோட்டில் ஒரு காங்கிரஸ் கண்டிராக்டர் பழைய கிணற்றைப் புதுக்கிணறு என்று சொல்லி பணம் வாங்கிவிட்டார். இதை அங்கேயுள்ள ஆர். டி. ஓ. கண்டுபிடித்துவிட்டார். அதற்காக அவரை அங்கிருந்து மாற்றிவிட்டார்கள். இதனுல் ஜனங்களுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. இம்மாதிரி நிலைமை ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri S. PAKKIRISAMI PILLAI :** தலைவர் அவர்களே, கவர்னர் அவர்களின் உரையின்மீது நடக்கும் இந்த விவாதத்தில் சில வார்த்தைகள் சொல்லுவதற்கு எனக்கு சந்தர்ப்பம் அளித்ததற்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தில் பிரிட்டிஷ் ராணியின் வருகையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறுர்கள். பிரிட்டிஷ் ராணி நம் நாட்டிற்கு வருவதுபற்றி நாம் பெருமைப்படவேண்டிய விஷயம். நம் நாட்டிலுள்ளவர்கள் அத்தனைபேரும் மகிழ்ச்சியடையும்படியான நிலையில் இருந்து வருகிறோம். நம் நாட்டிற்கு விஜயம் செய்யும் ராணியைப் பார்ப்பதற்கு நம் நாட்டு மக்கள் ஆவலுடன் இருந்த போதிலும், நேரில் அவர்களைப் பார்ப்பதற்கு முடியாத நிலையில் தான் இருக்கிறுர்கள். ஆனுல் நமது ராஜ்யத்திற்கு ராணி அவர்கள் வரும்பொழுது, அவர்களுக்கு வரவேற்பு கோலாகலத்துடன் நடக்கும்படியான நிலையில், நல்ல ஏற்பாடுகள் செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். இதை நான் சொல்லுவதற்குக் காரணம் நம் நாடு இணைந்திருக்கும் காமன்வெல்தின் தலைவி என்ற முறையிலே வரவேற்பு அளித்தாலும்கூட, பெண் குலத்திற்கே பெருமை அளிக்கும் வகையில் அவர்கள் தலைசிறந்து விளங்கு கிறுர்கள் என்பதற்காகத்தான்.

அடுத்தபடியாக, கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தில், நம் நாட்டிலே சமீபத்தில் எல்லா ஜில்லாக்களிலும் நல்ல மழை பெய் திருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறுர். உண்மைதான். சென்னை நகரிலே பலத்த மழை ஏற்பட்டு சேதம் விளைந்திருக்கிறது. அத் துடன் புயல் காற்று வீசியது. அதன் விளைவாக 20,000 குடும்பங் களுக்கு மேல் பாதிக்கப்பட்டிருக்கிறுர்கள். எல்லோரும் ஏழைகள் தான். அவர்களுடைய நிர்க்கதியான நிலையிலே, பல சங்கங்கள் முன்வந்து உதவி அளித்துள்ளன. குஜராத்தி மண்டல், மார்வாரி சங்கம், செஞ்சிலுவைச் சங்கம், நடிகர்கள் சங்கம், இன்னும் பல சங்கங்கள், அவரவர்களுடைய சக்திக்கேற்றவாறு உதவி செய் திருக்கிறுர்கள். உணவு அளித்திருக்கிறுர்கள். நம்முடைய ராஜ்யத்திலே பண உதவியும் அளித்திருக்கிறுர்கள். நமது பிரதமர்கூட கொஞ்சம் பணம் அனுப்பியிருந்தார்கள். அந்தப் பணத்தை எல்லாம் அரசாங்கத்தார் ஒரு சிறந்த முறை யிலே விநியோகிக்காமல், இதர ஸ்தாபனங்களுடன் ஒத் துழைத்து ஒருமுகமாக விநியோகம் செய்யாமல் தனிப்பட்ட முறையிலே விநியோகிக்க ஆரம்பித்தார்கள். பாதிக்கப்பட்டவர்

**[Sri S. Pakkirisami Pillai] [23rd January 1961**

களுக்கு நிவாரணம் அளிக்கும் விஷயத்தில்கூட பாகுபாடுகள் காண்பிக்கப்பட்டன என்பதை நான் இங்கே சொல்லாமல் இருக்க முடியாது. 10 ரூபாய், 20 ரூபாய், 30 ரூபாய் என்று பாகுபாடு செய்து கொடுத்திருக்கிறார்கள். சிலருக்கு 30 ரூபாய்க்குப் பதிலாக 10 அல்லது 20 ரூபாய்தான் கொடுத்திருக்கிறார்கள். தவிர, ரூபாய் 50-க்கு மேல் வருமானம் இருந்தால் கொடுக்கமுடியாது என்றும் சொல்லிவிட்டார்கள். சென்னை நகரிலே வாழவேண்டுமென்றால், குறைந்தது 50 ரூபாய்க்குமேல் வருமானம் இருந்தால்தான் முடியும். இல்லாவிட்டால் ஒரு குடிசையை சொந்தமாக வைத்திருக்கும் நிலைமையிருக்காது. இம்மாதிரி நிபந்தனைகள் ஏற்படுத்தி பலருக்குக் கொடுக்க முடியாது என்று சொன்னதினால் யாருக்குத்தான் கொடுத்திருப்பார்கள் என்ற வினா எழுகிறது. அதே சமயத்தில் அரசாங்கத்தின் நிலத்தை ஆக்கிரமிப்பு செய்திருக்கிற குடிசை சொந்தக்காரனுக்குகூட கொடுக்க முடியாது என்ற கட்டுப்பாட்டையும் விதித்தார்கள். சுமார் 20,000 குடும்பங்கள் பாதிக்கப்பட்டுள்ள நிலையில் 4,000 பேர்களுக்குமேல் கொடுத்திருக்க மாட்டார்கள் என்று தெரியவருகிறது. ஏன் இம்மாதிரியான நிபந்தனைகளை ஏற்படுத்தவேண்டுமென்று தெரியவில்லை. அப்படி ஆக்கிரமிப்பு செய்த ஏழைகளுக்கு 10 ரூபாய் கூட கொடுக்க மறுத்துவிட்டது அவர்களுக்கு ஒரு தண்டனையா என்பது புரியவில்லை. இம்மாதிரியான ரீதியில் அரசாங்கத்தார் வெள்ள நிவாரண வேலையைச் செய்திருக்கிறார்கள். இந்த கட்டுப்பாடுகள் இனிமேல் அவசியமில்லை என்று தெரிவிக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். இதைத் தவிர, சென்னை கார்ப்பரேஷன் அதிகாரிகள், "மேயர் வெள்ள நிவாரணக் குழு"வை நியமித்து, அதன் மூலமாக வசூல் செய்து, கைத்தறித் துணிகளையும் வாங்கி, ஏழைக் குடும்பங்களுக்கு விநியோகம் செய்து வருகிறார்கள். இம்மாதிரி வெவ்வேறு வழிகளில் இல்லாமல், ஒரேமுகமாக நிவாரண வேலையைச் செய்திருந்தால், நிறையக் குடும்பங்கள் பயனடைந்திருப்பார்கள். வாங்கினவர்களே வாங்கும்படியான நிலையிலே இருந்திருக்காது என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக பிரிட்டிஷ் ராணி அவர்களின் வருகையை முன்னிட்டு, சென்னை நகரில் சமீபத்தில் ஏற்பட்ட மழையினால் பாதிக்கப்பட்ட ரோடுகளை சர்க்கார் சீர்படுத்த முன்வந்திருக்கிறார்கள். இம்மாதிரியான ரோடுகள் சுமார் 10 அல்லது 15 வருஷ காலத்திற்கு நீடிக்கும்படியான நிலையில் போடுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

ஆனால் இப்படிச் சீர்கேடான முறையில் இருக்கும் ரோடுகளைப் பற்றி கவர்னர் அவர்கள் தன் பிரசங்கத்தில் சிறப்பாகச் சொல்லியிருக்கிறார்கள் என்றால், அந்த ரோடுகள் எவ்வளவு கேவலமான நிலையில் விட்டுவிட்டு இருந்தார்கள் என்பதைத்தான் அது சுட்டிக்காண்பிக்கிறது என்றுதான் சொல்லுவேன். அவ்வளவு சீர்கேடான நிலையில் ரோடுகளை இத்தனை காலமாக சீர்படுத்தாமல் விட்டிருந்திருக்கிறார்கள். ஆகவே, இப்பொழுது சீர்செய்த பிறகாவது, அந்தப் பழைய நிலைக்கு அந்த ரோடுகள் போய்விடாமல் சர்க்கார்

23rd January 1961] [Sri S. Pakkirisami Pillai]

பராமரிக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறேன். முக்கியமாக பெரிய ரோடுகளேயும், முக்கியப் பகுதிகளில் இருக்கும் ரோடுகளே யும், சர்க்கார் அவர்களே சீர்படுத்தி பராமரித்துவர தங்கள் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று இந்த சந்தர்ப் பத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, வாழ்க்கைக்கு உரிய அத்யாவசியப் பொருள் கள் சமீபத்தில் அதிக விலேக்கு உயர்ந்து போய் இருக்கின்றன. முக்கியமாக அரிசி, கட்டை போன்ற வஸ்துக்கள் விலே உயர்ந்து போய் இருக்கின்றன. இதற்குக் காரணம் என்ன? அறுவடைக்கு முன்னுல் அப்படித்தான் இருக்கும், பின்னுல் சரியாகப் போய் விடும் என்றும் சொல்லப்படுகிறது. அம்மாதிரி அதிக விலே. ஏற்றத்தை தடுக்க சர்க்கார் என்னென்ன நடவடிக்கைகள் எடுக் கிருர்கள்? திடீர், திடீர் என்று விலேயேற்றம் ஏற்படுவதால், ஏழைகளும், நடுத்தர வகுப்பினரும் வாழ்க்கை நடத்த முடியாமல் தவிக்கிருர்கள். இதற்குச் சமாதானமாக 300, 400 நியாய விலேக் கடைகளே வைத்திருக்கிறேம் என்று சொல்லிவிட்டால் மாத்திரம் போதாது. இம்மாதிரி உயர்வதற்குக் காரணங்கள் என்ன என்று ஆராய்ந்து, மக்களுக்கு தக்க காலத்தில் திவிரமாக உதவி செய்ய வேண்டும். திடீரென்று ஒரு பொருளின் விலே ஏறுமாளுல், பண்டங்களே வாங்க முடியாத நிலேமை ஏற்படுகிறது; ஏழைகள் தவிக்கிருர்கள். உதாரணமாக, இப்பொழுது விறகு விலே ஒரு குண்டு ரூ. 2¾ அல்லது ரூ. 3 என்று ஏறியிருக்கும்போது, வாங்க முடியாமல் ஏழைகள் தவிக்கிருர்கள். அந்த மாதிரிப் பரிதாப கரமான நிலே ஏன் ஏற்படுகிறது? அதை ஆராய்ந்து, அம்மாதிரி நிலேக்குப் போகவிடாமல், அரசாங்கம் நல்ல ஒரு திட்டத்தை ஏற்படுத்தி, உதவி செய்யவேண்டும்.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி கவர்னர் அவர்கள் தங்கள் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிருர்கள். அவர்கள் குறிப் பிட்டிருக்கும் விஷயங்களேப் பாராட்டி, சிலாகித்துப் பேசும்படி யாக பொதுவாகயிருந்தாலும், எதிர்த்துப் பேசும் நிலேயிலும் இருக்கிறேம். நம் நாடு வளம் பெறவேண்டும் என்று அதற் குண்டான பல திட்டங்களே தயாரித்து, பல்வேறு வழிகளில் பல கோடி ரூபாய்களே செலவழித்து, வெவ்வேறு திட்டங்களேயும் ஆரம்பித்து, முதல் இரண்டு திட்டங்களின்போதும் செலவழித் திருக்கிறேம். ஆனுல், இந்த திட்ட லட்சியங்கள் நிறைவேற்றப் பட்டிருக்கின்றனவா என்று நாம் யோசனே பண்ணிப்பார்த்தால், பல திட்டங்கள் கைவிடப் பட்டிருக்கின்றன என்பது தெளிவாகும். திட்ட லக்ஷியங்களே அடைய தவறி விட்டிருக்கின்றன. விவசாய விஷயத்தில், விளே பொருள்கள் உற்பத்திச் செலவுக்குத் தக்க அளவு உணவு தானியங்கள் விலே பெருக இல்லே என்பதைக் கணக் கிட்டுப் பார்த்தால் நன்ருகத் தெரியும். நிலமற்ற விவசாயிகள் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது என்பது தெளிவாகத் தெரியும். அதற்குக் காரணம் என்ன? ஏழை விவசாயிகள் குடும்ப பாரத்தை சரிகட்ட முடியாமல், தங்களுக்கு இருந்த சிறுசிறு நிலப் பரப் பையும், நிலபுலன்களேயும் விற்றுவிட்டு, மற்றவர்கள்போல் வேலே

[Sri S. Pakkirisami Pillai] [23rd January 1961

தேடிக்கொண்டு நிற்கும் நிலையில் மாறிவிட்டிருக்கிறார்கள். ஆனால், அந்த விவசாயக் கூலிகள் வேலை செய்து போதுமான கூலி பெற முடியாத நிலையிலும் இருக்கிறார்கள். அவர்களும் பட்டணம் வந்து வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகரிக்கிறார்கள். இதனாலேயே பட்டணத்திலும் அதிக ஜனப் பெருக்கம் ஏற்பட்டிருக்கிறது. கிராமங்களில் ஜனங்கள் எண்ணிக்கையில் குறைந்துகொண்டே வருகிறார்கள். கிராமங்களிலும், ஜில்லாக்களிலும் நல்ல மாதிரியான விவசாயம் செய்து அவர்கள் போதுமான ஊதியம் பெற்று வாழ்க்கை நடத்த முடியாத நிலையில் இருக்கிறார்கள் என்பதைத்தான் எடுத்துக் காண்பிக்க விரும்புகிறேன்.

விவசாய உபரி வருமானம், இந்த இரண்டு திட்ட காலத்திலும், திட்ட லக்ஷியப்படி மக்கள் அடையவில்லையென்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். முக்கியமாக விவசாயப் பகுதியில் ஐந்து சதவிகிதம் வருமானம் உயர்ந்திருக்கிறது என்று கணக்கில் காண்பிக்கப்படுகிறது. அந்த ஐந்து சதவிகித வருமானமும் பெருகியிருக்கிறது என்றால், ஜனத்தொகை வளர்ச்சியையும், மக்கள் எண்ணிக்கை 1½ அல்லது 2 சதவிகிதம் ஜனத்தொகையில் பெருகியிருக்கிறார்கள் என்பதை கணக்கில் எடுத்துக்கொண்டு அதோடு கூட, முதலீடும் அதிகமாகப் போட்டிருக்கிறதை கணக்குப் போட்டுப் பார்த்தால், இந்த ஐந்து சதவிகித உயர்வும் நமக்குக் கிடைக்காது ; ஒரு சதவிகிதமோ என்னவோதான் கிடைக்கும். அந்த ஒரு சதவிகிதமும் பரவலாக ஏழை மக்களுக்குக் கிடைக்காது . அங்கேயிருக்கின்ற ஒரு சில பணக்காரர்கள் இடத்தில்தான் சிக்குண்டு இருக்கும். இந்த நிலையில்தான் பொருளாதார திட்ட லக்ஷியங்கள் நிறைவேறியிருக்கின்றன நம் நாட்டில். ஆகவே இந்த விஷயத்தில் அரசாங்கம் தீவிரமான முயற்சிகள் எடுக்கவில்லை என்று இந்த சந்தர்ப்பத்திலே சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஏழைகள் இன்னும் மிகமிக ஏழைகளாக மாறும் பொருளாதாரத் திட்டமாகத்தான் இருக்கிறது.

வாழ்க்கைச் செலவு புள்ளி விவரத்தை எடுத்துக் கணக்குப் போட்டுப் பார்த்தால், விவசாய ரீதியில், குடும்ப வருமானம், 1951-லிருந்து 1957 வரையில், ரூ. 477-லிருந்து 437-க்குக் குறைந்திருக்கிறது ; இது வருஷக் குடும்ப வருமானம். அதே சமயத்தில், குடும்பத்தின் வாழ்க்கைச் செலவைப் பார்த்தால், ரூ. 467-லிருந்து, ரூ. 617-க்கு உயர்ந்திருக்கிறது. 1957-க்குப் பின்னால் விலைவாசிகள் மிகப் பயங்கரமாக உயர்ந்திருக்கிறது. இந்த நிலையில் ஏழைகள், முக்கியமாக நடுத்தர மக்கள் எப்படி வாழ்க்கை நடத்த முடியும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால், யாரும் சந்தோஷப் படும் நிலையில் இல்லை என்பதை மட்டும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மோசமான நிலையில்தான் மக்கள் இருக்கிறார்கள்.

அடுத்தபடியாக இந்த வேயில்லாத் திண்டாட்டம். இந்த வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் திட்டம், ஏதோ, நாய், தன் வாலைப் பார்த்துச் சுற்றி சுற்றி வருவதுபோல், " The dog running after its tail " என்கிறார்களே அதுபோல்

23rd January 1961] [Sri S. Pakkirisami Pillai]

தான் இருக்கிறது. ஆனால், கணக்கு மாத்திரம் காட்டுகிறார்கள். ஆனாலும், எத்தனை பேருக்கு வேலை கிடைத்தது, உண்மையிலேயே எல்லோருக்கும் வேலை கிடைத்ததா என்ற உண்மை விவரங்களை யெல்லாம் கொடுக்கச் சர்க்கார் தவறி யிருக்கிறது என்பதற்கு யாருக்கும் விளக்கம் தேவையில்லை. ஆகவே, இப்பொழுது இரண்டு ஐந்தாண்டுத் திட்டம் முடிந்து விட்டது. இந்த நிலைதான் இருக் கிறது. இப்பொழுது இருக்கும் மக்கள் எண்ணிக்கை ஒன்று என்று வைத்துக்கொண்டால், மூன்றாவது ஐந்தாண்டு திட்ட முடிவில் அது ஒன்னரை மடங்கு ஆக உயரும் என்று சொல்லு கிறார்கள். அப்படி விட்டுக்கொண்டு போனால், அது நாட்டின் சுபீட்சத்திற்கு வழியாகாது என்பதைத்தான் நான் சொல்ல முடியும்.

10-00 a.m.

தொழிலாளர்கள் விஷயத்தில் அரசாங்கத்தார் தம்முடைய கடமையைச் செய்யத் தவறியிருக்கிறார்கள் என்பதை நான் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தியத் தொழிலாளர்கள் மாநாட்டிலே, தொழிலாளர்கள் சார்பிலும், முதலாளிகள் சார்பிலும், அரசாங்கத்தார் சார்பிலும் பிரதிநிதிகள் கலந்தாலோசித்துப் போட்ட திட்டங்களை அரசாங் கத்தார் ஒருவாறு ஏற்றுக்கொண்டிருந்தபோதிலும், அதை இங்கே நடைமுறையில் நிறைவேற்றத் தவறியிருக்கிறார்கள்.

உதாரணமாக (Need based minimum wages) அவசியமான குறைந்தபட்சச் சம்பளத்தைத் தொழிலாளர்களுக்குக் கொடுத் தாகவேண்டும் என்ற நிலையில் சமீபத்தில் 'வேஜ் போர்டு கமிஷன்' நியமிக்கப்பட்டு, அவர்கள் வழியாக சிபார்சுகள் கிடைத்தன. பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கென்று சிபார்சு ஒன்றும் வெளி வந்தது. அதை அரசாங்கமும் முதலாளிகளும் கலந்து ஆலோ சித்து, எவ்வளவு உயர்ந்தபட்சம் போக முடியுமோ அந்த அளவுக்கு ஒத்துக்கொண்டார்கள். அந்த அளவுக்கு ஒத்துக் கொள்ளும்படிச் செய்தார்கள். அப்படி ஒத்துக்கொண்ட ஒப்பந் தத்தைக் கூட அனேக முதலாளிகள் இதுவரை அமுல் செய்ய வில்லை. முக்கியமாக, ஒரு பிரிட்டிஷ் முதலாளி, பெருத்த முதலாளி, அந்தப் பணத்தைக் கொடுக்க மறுத்திருக்கிறார். வேறு எதையோ காண்பித்து, கோர்ட்டிலே வழக்குத் தொடுத்து அவர்கள் தோற்றுவிட்டாலும், இந்தப் பிரச்சினை மீது சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயிருக்கிறார்கள். இப்படித் தொழிலாளர் விஷயத்தில் முதலாளிகள் மேலும் மேலும் போய்க்கொண்டிருந்தால், அவர் களைக் கூப்பிட்டு எச்சரிக்கை செய்யும்படியான நிலையில் அரசாங் கத்தார் இல்லையென்றால், ஏழைத் தொழிலாளர்கள் எந்த வழியிலே முன்னேற முடியும்? 'வேஜ் போர்டு கமிஷன்' ரிப்போர்ட்டெல்லாம் எதற்காக ஏற்படுத்தப்பட்டன? முதலாளிகள் கஜானாவில் போகும் பணத்தில் ஒரு அளவை மடக்கி ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுக்கவேண்டும், முதலாளிகள் மாத்திரம் அதிகமான லாபத்தை அடையக் கூடாது, அதைத் தொழிலாளர்களும் அடையும்படியான நிலையில் இருக்கவேண்டுமென்ற எண்ணத்தை வைத்துக்கொண்டு

தான் ஏற்படுத்தினுர்கள். இம்மாதிரி ரிபோர்ட்டை அரசாங்கம் ஒத்துக்கொண்டிருந்தாலும், அதை அமுல் செய்யும்போது அதை நிறைவேற்றும் வகையில் ஒன்றும் செய்யவில்லே, அந்த முதலாளி களேக் கண்டிக்கவில்லே என்பதைத்தான் நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

இது தவிர, பதினேந்தாவது தொழிலாளர் மாநாட்டிலே நிறை வேற்றிய தீர்மானங்கள் காற்றிலே பறக்கவிடப்பட்டிருக்கின்றன. முதலிலே செய்த தீர்மானங்களெல்லாம், அவைகளின் உறுதி, கட்டுப்பாடுகள் எல்லாம் இப்பொழுது நழுவ விடப்பட்டு வருகின்றன. அமைச்சர்களே அந்தத் தீர்மானத்திலிருந்து நழுவிக்கொண்டு போகிறுர்களே தவிர, நிறைவேற்றத் தைரியம் இல்லே. காரணம், ஒன்று முதலாளிகளுக்குப் பயப்பட்டுக் கொண்டு இருக்கலாம்; அல்லது தொழிலாளர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்ற அக்கறை இல்லாத மனப்பான்மை கொண் டிருக்கலாம். ஆகையால், இம்மாதிரியான நிலேயில் மந்திரி மார்கள், அரசாங்கத்தார் இம்மாதிரி செய்து கொண்டிருக் கிறுர்கள் என்ருல், நம் நாடு எப்பொழுது முன்னேறும் என்பதைச் சொல்ல முடியாமலிருக்கிறது. தொழில் உறவு முறை என்று வைத்திருந்தார்கள். 'கோட் ஆப் டிஸிப்ளின்' என்று எல்லாத் தொழிற்சாலேகளிலும் ஒட்டப்பட்டிருக்கின்றன. 'கோட் ஆப் டிஸிப்ளின்' என்பதை தொழிலாளிகள் கடைப்பிடிக்க வேண்டுமென்று சொல்லி, முதலாளிகள் இதைப் பயன்படுத்தி, தொழிலாளர்களுடைய வேலேப் பளுவை அதிகமாக்கி, அதற்கேற்ற சம்பள உயர்வு கொடுக்காமல் ஏமாற்றிவிட்டிருக் கிறுர்கள். கோட் ஆப் டிஸிப்ளினிலிருந்து முதலாளிகள் தான் தவறியிருக்கிறுர்கள். ஆனல், தொழிலாளர்கள் அம்மாதிரி இல்லே என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த நிலேயிலே முழுதும் முதலாளித்துவ மனப்பான்மையில் தான் தொழிலாளர்களேப் பொறுத்தவரையில் அரசாங்கம் நடந்து கொண்டிருக்கிறது என்பதை நான் திட்டவட்டமாகக் கூற முடியும்.

THE HON. SRI R. VENKATARAMAN : முதலாளிகளும் அப் படித்தான் சொல்லுகிறுர்கள்.

SRI S. PAKKIRISAMI PILLAI : நகரத்திலே பொதுக்கூட்டம் போட வேண்டுமென்ருல் போலீசார் பெரிய கஷ்டத்தை ஏற்படுத்தி யிருக்கிறுர்கள். காரணம் பல இருக்கலாம். பொதுக்கூட்டம் போடவேண்டுமென்ருல், பணத்தைச் செலவழித்து, அப்ளிகேஷன் போட்டு, கலெக்டரிடமோ சொந்தக் காரரிடமோ அனுமதி வாங்கி அந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்யவேண்டும். ஆனல், இப்பொழுது போலீஸ் கமிஷனர் ஒரு விதி போட்டிருக்கிறுர். அந்த விதியின் பிரகாரம், ஒரு போலீஸ் டிவிஷனில் ஒரு கூட்டத் திற்கு மேலே அனுமதி கிடையாது என்ற நிலேமை இருக்கிறது. ஒரு போலீஸ் டிவிஷனிலே ஒரு கூட்டமென்ருல், இருபது முனி சிபல் டிவிஷன்கள் ஒவ்வொன்றிலும் ஒன்றுக்குமேல் கூட்டம் போட

23rd January 1961] [Sri S. Pakkirisami Pillai]

முடியாது. இது மிகவும் தொழிற் சங்கக் கூட்டத்தைப் பாதிக்கிறது. தொழிற் சங்கக் கூட்டம் அடிக்கடி போடும்படியான நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறது. தொழிற்சங்கக் கூட்டத்திற்கு அனுமதி இல்லையென்றால், ஏதாவது ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது அந்தத் தொழிலாளர்களுக்கு எல்லாவிதப் பிரச்சினைகளையும் எடுத்துச் சொல்லும்படியான நிலையிலே இல்லை. போலீஸ் உத்தரவு வந்த பிறகு தான் பொதுக்கூட்டம் போடும் நிலையில் இருக்கிறோம். கட்சிக்குக் கட்சி சண்டை போடுகிறது என்ற நிலையில் அந்தக் கட்டுப்பாட்டைக் கொண்டு வந்தார்கள் என்றாலும்கூட இது தொழிலாளர்களை மிகவும் பாதிக்கிறது. தொழிற் சங்கங்களின் அன்றாட பிரச்சினைகளை அவரவர்களுக்கு எடுத்துச்சொல்லி நல்ல கட்டுப்பாட்டை, ஒழுங்கு முறையைத் தொழிலாளர் மத்தியிலே ஏற்படுத்துவதற்கு ஒன்றும் செய்ய முடியவில்லை என்பதைத்தான் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக் கொள்கிறேன்.

மேலும், ஈ, கொசு உபத்திரவம் பெரிதாகப் போய்விட்டது. முக்கியமாக அய்யனாவரம், பெரம்பூர் பகுதியிலே இந்த உபத்திரவம் பெரிதாக இருக்கிறது. அய்யனாவரத்தில் ஒரு பால் பண்ணை நெடு நாளாக இருந்துகொண்டிருக்கிறது. அங்கே ட்ரெயினேஜ் திட்டம் சரிவர இல்லாததால் அங்கே வடிகால் மூலமாகப் போய் தேங்கும்படியான கழிவு பால் காரணமாக கொசுக்களும், ஈயும் பெருகிவிட்டன. பெரம்பூர் ரயில்வே தொழிற்சாலையில் வேலை செய்யக்கூடியவர்கள் அந்தப் பகுதியில் வசிக்கிறார்கள். இரவு, பகல் ஷிப்டுகளில் வேலை செய்கிறார்கள். பகலிலே தூங்கினால் ஈ உபத்திரவம். இரவிலே தூங்கினால் கொசு உபத்திரவம். இதை ஒழிக்க காப்பரேஷனும் தீவிர நடவடிக்கை எடுக்கவில்லை. அரசாங்கமும் எடுக்கவில்லை. இந்த நிலையில் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்படுகின்றனர்.

கடைசியாக, குடியிருக்க வீடு கிடைக்க வசதியில்லாத உபத்திரவத்தை அங்கே மக்கள் அனுபவிக்கின்றார்கள். வீடுகள் கட்டுவதற்குப் போதுமான வசதி கிடையாது. நிலம் கிடையாது. அரசாங்கமும் அங்கே முன்வந்து தொழிலாளர்களுக்கு வீடு கட்டும்படியான திட்டத்தின்கீழ் இன்னும் அதிகமான வீடுகள் கட்டவில்லை. இப்பொழுது கட்டியிருக்கும் 900 வீடுகள் போதாது. வடக்கிலுள்ள மாகாணங்களில் தொழிலாளர்களுக்காக அதிகமான வீடுகள் கட்டியிருப்பதைப் பார்க்கிறோம். நம் ராஜ்யத்தில் கொஞ்சமான வீடுகள்தான் கட்டியிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் வீடுகள் கட்ட ஏன் திட்டங்கள் நம் ராஜ்யத்தில் இல்லை என்பதைக் கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கின்றேன்.

MR. SPEAKER : இப்பொழுது ஸ்ரீ எம். வில்லியம் அவர்கள் பேசலாம். கனம் அங்கத்தினர் பதினைந்து நிமிடங்கள் எடுத்துக் கொள்ளலாம். அதிகமான அங்கத்தினர்கள் பேசுவார்கள் என்று

[Mr. Speaker] [23rd January 1961

நினைத்து ஒரு அங்கத்தினருக்கு பத்து நிமிடங்கள் வீதம் அனுமதித்தேன். அதிகம் பேர்கள் பேச முன்வராததால் கனம் அங்கத்தினர் திரு. வில்லியம் அவர்கள் பதினைந்து நிமிடங்கள் பேசலாம்.

(Sri V. Subbiah in the Chair.)

* SRI M. WILLIAM : தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையைப்பற்றி விவாதிக்கின்ற வேளையில் என்னுடைய கருத்துக்களை இங்கு சொல்லலாம் என்று நினைக்கிறேன். நாம் அனைவரும் அறிந்தது, கவர்னர் பெருமான் உரையில் மதிப்பிற்குரிய பிரிட்டிஷ் ராணி அம்மையார் சென்னைக்கு வர விருப்பதை குறிப்பிட்டிருக்கிறார்கள். அதுபோலவே சில மாதங்களுக்கு முன் பேய் மழையினால் பெரும் துன்பத்திற்கு ஆளான மக்களுக்கு நமது அரசாங்கமானது உடனுக்குடன் தகுந்தவாறு நிவாரண வேலைகளை நடத்தினார்கள், என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவ்வண்ணமாக நடைபெற்றிருக்கிற வேலைகளிலும் குறை சொல்லப்படுகிறது.

எல்லாவற்றிக்கும் மேலாக அவர்கள் ஐந்தாண்டுத் திட்டத்தில் உள்ள முக்கியமான அம்சங்கள் பற்றி தம் உரையில் எடுத்துக் குறிப்பிட்டிருக்கிறார்கள். முதன்முதலாக ஆகாரப் பொருள்களின் உற்பத்திக்கு அதிக கவனம் எடுத்துக்கொள்ளப்படுகிறது. அதற்காகப் பல வழிவகைகளைச் செய்யவேண்டும் என்று எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இப்போது நடத்தப்படும் திட்டத்தைவிட இரண்டு மடங்கு அதிகமாகப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மேஜர் இர்ரிகேஷனுக்காக ரூ. 27 கோடியும், மைனர் இர்ரிகேஷனுக்காக ரூ. 8 கோடியும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கியதைவிட இரண்டு மடங்கு என்று காண்கிறோம். அதுபோலவே மண் அரிப்புத் திட்டதிற்கும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது மாத்திரம் அல்ல. ரசாயன உரத்தைப் பெருக்குவதற்கும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வண்ணமாக சுமார் 80 கோடி ரூபாய்—மூன்றில் ஒரு பங்கு தொகைக்கு மேல்—ஆகாரப் பொருள்களின் உற்பத்திக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறதென்று பார்க்கும் போது சந்தோஷம். நமது பிரதேசத்தில் நமது மக்கள் சுபிட்சமாக வாழவேண்டுமானால் விவசாயமானது நல்லமுறையில் நடத்தப்படவேண்டும். ஆகாரப் பொருள்கள் அதிகமாக உற்பத்தி செய்யப்படவேண்டும் என்று கண்டுகொள்கிறோம். இவ்வண்ணமாக பலவிதமான நீர்ப்பாசனத் திட்டங்களை நடைமுறையில் கொண்டு வந்து ஆகாரப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்று நமது சர்க்கார் அக்கறை எடுத்துக்கொண்டு திட்டங்களை வகுத்திருக்கும்போது அந்தத் திட்டங்கள் நல்லமுறையில் நடக்கிறதா என்று பார்ப்பதிலும் சற்று ஆலோசிக்க வேண்டும்.

23rd January 1961] [Sri M. William]

ரசாயன உரத்தைப் பொறுத்தவரையில் பலவிதமான குறைகள் வந்துகொண்டிருக்கின்றன. அவைகள் விவசாயிகளுக்குத் தக்க சமயங்களில் கிடைக்கவில்லை என்றும், அவர்கள் உரம் வாங்கவேண்டுமானால் வில்லேஜ் ஆபீசர்களிடம் சென்று சர்டிபிகேட் பெற்று, கூட்டுறவு சங்கங்களில் சென்று வாங்க வேண்டியிருக்கிறது. அவ்வண்ணமாக வாங்குவதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இப்போது இருக்கிற ஏற்பாட்டை நிறுத்திவிட்டு பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாக இந்த ரசாயன உரத்தை விநியோகம் செய்தால் அவர்களுக்கு ஏற்ற வகையில் கஷ்டம் இல்லாமல் உரத்தைப் பெற்றுக்கொள்ள வசதி ஏற்படும் என்று நினைக்கிறேன். ஆகவே அந்த விஷயத்தைப்பற்றியும் சர்க்கார் கவனித்து ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றி பேசுகையில் குமரி மாவட்டத்தில் உள்ள ஒன்றிரண்டு முக்கியமான திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். கடந்த 20 வருஷங்களாகவே அங்குள்ளவர்கள் பட்டணங்கால் திட்டத்தையும், சிற்றார் திட்டத்தையும் நிறைவேற்றித் தரவேண்டும் என்று கோரி வந்திருக்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அவை சேர்க்கப்பட்டிருந்தன. ஆனால் இந்தப் பிராந்தியம் சென்னை ராஜ்யத்தோடு சேர்ந்துவிட்ட காரணமாக திருவிதாங்கூர்-கொச்சி சர்க்கார் இவ்விரு திட்டங்களையும் நிறைவேற்றாமல் விட்டுவிட்டார்கள். இப்போது நம்முடைய சர்க்கார் இந்த பட்டணங்கால், சிற்றார் திட்டங்களை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்திருந்தார்கள். ஆனால் அவ்வண்ணமே நாம் நம்முடைய திட்டங்களுக்காகக் கோரியிருந்த மொத்தத் தொகையில் இப்போது வெட்டு ஏற்பட்டிருக்கிற காரணத்தினால் எந்த எந்தத் திட்டங்களைக் கைவிடப்போகிறார்கள் என்று தெரியவில்லை. எந்தக் காரணத்தினாலும் இந்தப் பட்டணங்கால், சிற்றார் நீர்ப்பாசனத் திட்டத்தைக் கைவிடக்கூடாது என்று நான் இந்தச் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். இத்திட்டங்களினால் சுமார் 20 ஆயிரம் எக்கர் நிலங்களுக்கு மேல் சாகுபடிக்குக் கொண்டுவரலாம் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. ஆகவே அத்திட்டங்களை நடைமுறையில் கொண்டு வரும்படியாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மின்சாரத்தைப்பற்றி தகுந்த இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. குமரி மாவட்டத்தைப் பொறுத்தவரையில் ஒரு குறை இருந்து கொண்டிருக்கிறது. கேரளா பிரதேசம், மெட்ராஸ் பிரதேசம் இரண்டையும் ஒரு ரோடுதான் பிரிக்கிறது. ரோடுக்கு அப்புறம் ஒட்டி உள்ள கேரளா பிரதேசத்தில் உள்ள எல்லா கிராமங்களுக்கும் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ரோடுக்கு இப்புறம் மெட்ராஸ் பகுதியில் உள்ள கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்படாமல் இருக்கிறது. கூடிய சீக்கிரம் இந்த எல்லா கிராமங்களுக்கும்கூட விஸ்தரித்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri M. William] [23rd January 1961

இன்னொன்று. கோதையார் திட்டத்தால் மின்சாரம் உற்பத்தி செய்யலாம் என்று சொல்கிறார்கள். 30 ஆயிரம் கிலோவாட் மின் சார சக்தி உற்பத்தி பண்ணலாம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். பைக்காரா திட்டத்தைவிட சிறப்பான ஒரு திட்டமாகவும் இது இருக்கக்கூடும் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே இந்த கோதையார் மின் சாரத் திட்டத்தையும் எடுத்து நிறைவேற்றித் தரவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக அநேக கைத்தொழில்கள் இங்கு நிறுவ உத் தேசித்திருக்கிறார்கள். அது மிகவும் சந்தோஷமான காரியம். அதேசமயத்தில் குமரி மாவட்டத்தில் ஏதாவது ஒரு முக்கியமான கைத்தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன். அதற்குரிய வாய்ப்பு இங்கே இருக்கிறது. அதிகமான ரப்பர் தோட்டங்கள் அங்கே இருக்கின்றன சுமார் பதினைந்து ரப்பர் எஸ்டேட்ஸ் இருக்கிறது. இதுவன்னியில் சிறு சிறு தோட்டங்கள் இருக்கின்றன. இவைகளில் இருந்து உற்பத்தி யாகும் ரப்பர் ஏராளம் கிடைக்கிறது. அந்த ரப்பரைக் கொண்டு பலவிதமான சாமான்கள் செய்யலாம் என்று சர்க்காரே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அங்கே ஒரு ரப்பர் தொழிற்சாலை ஏற்படுத்தவேண்டும். இது அங்குள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கும் உதவி செய்யக்கூடும். ஆகவே அந்த மாவட்டத்தில் ஒரு பெரிய ரப்பர் தொழிற்சாலையை ஏற்படுத்த வேண்டும் என்று இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள் கிறேன்.

கல்வி சம்பந்தமாக ஷிப்ட் சிஸ்டம் நிறுத்தப்பட்டிருக் கிறது. அதற்காக சர்க்காரைப் பாராட்டுகிறோம். மேலும் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் இல்லை என்ற காரணத்தினால் 200 பள்ளிக் கூடங்களை அப்படியே வைத்திருக்கிறார்கள். அதுபற்றி தீர்மானம் ஒன்று போட்டு அனுப்பியிருக்கிறோம். பயிற்சி பெற்ற ஆசிரி யர்கள் கிடைக்கிற வரையில், பயிற்சி பெறாதவர்களைப் போடுவ தற்கு முன்வரலாம்.

கல்குளம், விளவங்கோடு தாலூகாக்களில் 25 உயர்தர பள்ளி கள் இருக்கின்றன. இந்த 25 உயர்தர பள்ளிகளிலிருந்து வெளி வரும் பிள்ளைகள் மிகவும் சௌகரியமாக மேல் படிப்புப் படிக்க இரண்டு தாலூகாக்களுக்கும் பொதுவாக ஒரு கல்லூரியை ஆரம்பிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

தூத்துக்குடி பெரிய துறைமுகமாக வரும் என்பது சந்தோஷ மான காரியம். அதேசமயத்தில் திருநெல்வேலியையும் கன்யா குமரியையும் இணைக்கும் ரயில் பாதை வேலையை மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் சேர்த்து நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த ரயில் பாதை போடுவதற்கு சர்க்காருக்கு அதிகச் செலவு ஏற்படாது என்று நான் நிச்சயமாக நினைக்கிறேன். ஏனென்றால் நிரப்பான பூமி. அதிகமான

23rd January 1961] [Sri M. William]

பாலங்கள் கட்டவேண்டிய அவசியம் இல்லை. குறைந்த செலவில் வேலையை முடித்துவிடலாம். இந்த விஷயத்தில் நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காரைச் சீக்கிரம் எடுத்துக்கொள்வதற்கு வற்புறுத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* **Sri A. VEDARATHNAM :** கனம் துணைத் தலைவர் அவர்களே, நம்முடைய ராஜ்ய பாலகர் அவர்களுடைய உரையை வரவேற்று சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். அவர்கள் உரையில் மாட்சிமை தங்கிய நம்முடைய பிரிட்டிஷ் ராணியார் அவர்களுடைய வருகையைப்பற்றி வரவேற்று கூறியிருப்பதை எதிர்க் கட்சியில் குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சியைச் சார்ந்த கோவை பிரதிநிதி அவர்கள் காமன்வெல்த் நாடுகளின் தலைவரின் வருகைக்காக இவ்வளவு பிரமாதப்படுத்தவேண்டியதில்லை என்று கேலியாக நேற்று பேசினார்கள். இன்று அவர்கள் அதைப் பேசவில்லை. காமன்வெல்த் மகாநாட்டிற்கு நம்முடைய பிரதம மந்திரி அவர்களுக்கு அழைப்பு எப்பொழுது வந்ததோ, என்று அவர்கள் பிரயாணத்தை ஆரம்பித்தார்களோ, அதிலிருந்து அதைத் தொடர்ந்து விடாது அக்கட்சியினர் பேசி வருகிறார்கள். இதைப் பற்றி அவர்களுக்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். காமன்வெல்த் நாடுகள் பிரதம மந்திரிகளுக்கு பிரிட்டிஷ் பிரதம மந்திரி அழைப்பு அனுப்பினார்கள். எல்லா பிரதம மந்திரிகளும் அங்கு சென்றிருந்தார்கள். நாம் விடுதலை பெற்ற அதே நேரத்திலே, விடுதலை பெற்ற பாகிஸ்தானுடைய பிரதமரும், நியூசிலாந்து பிரதமரும், ஆப்பிரிகா, ஆஸ்திரேலியா போன்ற நாட்டு பிரதமர்கள் அத்தனை பேரும் அங்கு நடந்த முதல் கூட்டத்திற்கு சென்றிருந்தார்கள். அப்பொழுது அந்த காமன்வெல்த் நாடுகளைச் சேர்ந்தவர்களுடைய கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய பிரிட்டிஷ் பிரதம மந்திரி பேச ஆரம்பிப்பதற்கு முன்பு மதிப்பிற்குரிய நம்முடைய பிரதம மந்திரி பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள் ஆற்றிய உரை, ஒரு முக்கியமான செயல் ஆகும். அதை அமானுஷ்யம் என்று சொன்னால்கூட பொருந்தும் என்று கூற விரும்புகிறேன். அதைக் கூர்ந்து கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுது காமன்வெல்த் மாநாட்டிற்கு பிரதமரை அழைக்கின்ற நேரத்தில், அதற்கு ' பிரிட்டிஷ் காமன்வெல்த் மாநாடு ' என்று பெயர் இருந்ததை மறந்திருக்க மாட்டார்கள். அவர்கள் சென்று உட்கார்ந்ததும் நம்முடைய பிரதமர் பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள் என்ன சொன்னார் என்றால் " இந்த மாநாட்டிற்கு ' பிரிட்டிஷ் காமன்வெல்த் மாநாடு ' என்று பெயரிடப் பட்டிருக்கிறது. இது தவறு, இதில் இருக்கும் ' பிரிட்டிஷ் ' என்ற வார்த்தையை நீக்கிவிடவேண்டும். அப்பொழுதுதான் நான் இதில் பங்கு எடுத்துக்கொள்ள முடியுமே அல்லாது, பிரிட்டிஷ் காமன்வெல்த் என்றிருந்தால் இதில் பங்கு எடுத்துக்கொள்ள இயலாது " என்று கூறியதை இந்த அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

[Sri A. Vedarathnam] [23rd January 1961

"**I am not here to liquidate the British Empire**" என்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் அவர்கள் சொன்னார்கள், அவர் அந்த நாட்டின் பிரதிநிதியாக அப்பொழுது இருந்திருக்கிறார். அவர் கூறிய வார்த்தைகளை நினைவுப்படுத்துகிறேன். நீங்கள் வேண்டுமானால் இந்த மாநாட்டில் பங்கு எடுத்துக்கொள்ளாமல் போகலாம். இந்த "பிரிட்டிஷ்" என்ற வார்த்தையை எடுக்க முடியாது என்று கூறியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிக்கூறத் துணியவில்லை. அதற்குப் பதிலாக அவர் என்ன செய்தார் என்றால், உடனே அவர் பேனாவை எடுத்து 'பிரிட்டிஷ் காமன்வெல்த் மா நாடு' என்றிருந்ததில் "பிரிட்டிஷ்" என்ற வார்த்தையை நீக்கி விட்டு வெறும் 'காமன்வெல்த் மாநாடு' என்று மாத்திரம் அதற்கு மகுடம் சூட்டினார். அன்றிலிருந்து இன்னும் அது காமன்வெல்த் கூட்டமாக இருக்கிறதேயல்லாமல் பிரிட்டிஷ் காமன்வெல்த்தாக இல்லை என்பதை அந்த அன்பருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

'சிங்கத்தினுடைய குகையில் சென்று அதனுடைய பல்லைப் பிடித்துப் பதம் பார்த்தது மாதிரி' என்று காலம் சென்ற ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்கள் சொல்வது வழக்கம். அந்தச் செய லுக்கு இது ஒப்பாக இருக்கிறது. பிரிட்டனிலே அந்த வெஸ்ட் மினிஸ்டர் அபே கட்டிடத்தில் போய், அவர்களுடைய நாட்டிலே இருந்துகொண்டு, அவர்கள் கூட்டத்தில், நம்முடைய தலைவர் பிரிட்டிஷ் காமன்வெல்த் என்பதிலுள்ள "பிரிட்டிஷ்" என்ற பதத்தை நீக்கவேண்டுமென்று சொன்னபோது அது நீக்கப்பட்டு இன்றைக்கு "**Commonwealth for all the Nations which are there**" என்ற முறையில் அங்கு இருக்கும் மற்ற எல்லா நாடுகளுக்கும் சேர்ந்து காமன்வெல்த் அல்லாமல், பிரிட்டனுக்கு காமன்வெல்த் அல்ல என்ற புகழுக்கு இலக்காகிய பெருமை இந்த உலகத்தில் யாருக்கு உண்டென்றால் அது நம்முடைய பாரத நாட்டிற்கும், நம்முடைய பாரத நாட்டுப் பிரதமருக்கும்தான் உரியதே யல்லாமல் வேறு யாருக்கும் அல்ல என்று சொன்னால் அதை யாரும் மறுக்க முடியாது. அப்படி சிறப்பு வாய்ந்த புகழோடு நாம் அங்கம் வகிக்கும் அந்த காமன்வெல்த் நாட்டின் தலைவர் நம் நாட்டிற்கு வந்திருக்கும்போது ஏன் அவர்களை வரவேற்க வேண்டுமென்று கேட்கலாமா? நம்முடைய இந்தியாவை அவர்கள் புறக்கணித்திருக்கலாம். ஆனால் பெயரை மாற்றிக் கொள்ள முடியாது என்ற சர்ச்சில் வார்த்தைகளை அவர்கள் நிறைவேற்றத் தயாராய் இல்லை. நாம் கட்டாயம் அந்த மாநாட்டில் பங்கு கொள்ளவேண்டுமென்று அவர்கள் விரும்பி, அவர்களுடைய பெயரை இதிலிருந்து நீக்கிவிட முன்வந்தார்கள் என்றால், நாம் அந்த இடத்தில் இருக்க வேண்டுமென்று அவர்கள் எவ்வளவு பிரியமாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்கு வேறு பல சான்றுகள் வேண்டியதில்லை.

இருந்தாலும் இன்னொரு சான்று கனம் அங்கத்தினருக்குக் கூற விரும்புகிறேன். சூயஸ் கனல் விஷயமாக நடந்தவைகளை நான் கூறத் தேவையில்லை. இந்த அறிஞர் அவையில் அதை நன்றாக அறிந்தே இருப்பார்கள். அந்த சமயத்தில் பிரிட்டன்

23rd January 1961] [Sri A. Vedarathnam]

இதில் எடுத்துக்கொண்ட நடவடிக்கைப்பற்றி நம்முடைய பிரதமர் பண்டிட் நேரு அவர்கள் எவ்வளவு பலமாக ஆட்சேபித்தார் என்றால், காமன்வெல்த் நாட்டின் உறுப்பினர் இம்மாதிரி ஒரு நடவடிக்கையை எதிர்க்கலாமா என்று கொஞ்சம் கூட யோசிக்காமல் பலமாக, தன் கண்டனக் குறிப்பை உலகம் எல்லாம் கேட்கும்படி செய்தார். இதுமாத்திரம் அல்லாமல் இம் மாதிரி நடவடிக்கையில் இனி ஈடுபட்டால் இந்த காமன்வெல்தி லிருந்து இந்தியா விலகக்கூடும் என்ற விஷயத்தை அறிவித்ததை இந்தச் சபைக்கும் குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் களுக்கும் நான் நினைவூட்ட விரும்புகிறேன். என்ன செய்தார். "நீங்கள் வேண்டுமானால் காமன்வெல்திலிருந்து விலகிப்போய் விடலாம். அதற்காக எங்களுக்கு முக்கியமான சூயஸ் கால்வாயை தேசியமயம் ஆக்குவதற்கு நாங்கள் உடன்படமுடியாது" என்று அவர்கள் சொல்லியிருக்கலாம். அப்படிச் செய்தார்களா? இல்லை. என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் என்பதைக் கூர்ந்து கவனிக்கவேண்டும்.

அதற்காக அந்த பிரிட்டிஷ் பிரதம மந்திரியை அந்த ஸ்தானத்திலிருந்து வெளியே அனுப்பினார்களேயல்லாது இந்தியா காமன்வெல்திலிருந்து விலகி விடலாம், நாங்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளை கைவிட முடியாது என்று அவர்கள் கூறவில்லை. அதைத்தான் என் தோழர்கள் கவனிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். எனவே, காமன்வெல்த்தில் நாம் இருக்கவேண்டுமென்று அவர்கள் பிரதம மந்திரி ஆந்தனி ஈடனைப் போன்ற பெரிய அறிஞர்கள் அந்த சேவையிலிருந்து நீக்கப் பட்டாலும் படலாம் காமன்வெல்திலிருந்து நாம் விலகக்கூடாது என்ற அந்த உயர்ந்த கருத்தைக் கொண்ட அந்த நாட்டின் தலைவி இங்கு வருகிற காலத்தில் நாம் அவர்களுக்கு எப்படி வரவேற்பு அளிக்க வேண்டுமென்ற விஷயத்தில் இது சாதாரண சிறிய விஷயம் அல்ல. உலகமே பிரமிக்கத் தக்கது. அமானுஷியம் என்று நான் கூறியது தவறல்ல. நன்கு யோசித்து அதன் பொருளை கூர்ந்து கவனித்துத்தான் அதைச் சொன்னேன். பல நூற்றாண்டு காலமாக சுதந்திரம் பெற்று காமன்வெல்த்தில் இருக் கிற நாடுகளின் தலைவர்களுக்கு எட்டாத ஒரு யோசனையை நமது பிரதம மந்திரி அங்கு கூறியிருக்கிறார்கள். அதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் தலை வணங்கி நமது கோரிக்கையை ஏற்றுக்கொண்டு நாம் அந்தயிடத்தில் இருக்க வேண்டுமென்று அவர்கள் ஒப்புக் கொண்டியிருப்பார்களேயானால் அந்த நாட்டின் தலைவி இந்த நாட்டிற்கு வரும்போது, நாம் ஆடம்பரமாக வரவேற்பதற்கு, 150 ஆண்டுகள் அவர்கள் ஆளுகையிலிருந்து இன்று நமக்கு அவர்கள் மனமாற சுதந்திரம் அளித்து, அந்த சுதந்திர நாட்டை நாம் ஆண்டு வருகிற காலத்தில் அவர்களுக்கு வரவேற்பு அளிப் பதில் என்ன தவறு இருக்கிறது என்று கேட்கிறேன்? அவர்கள் ஆதிக்கத்தின்கீழ் அநேக டொமினியன்களை, பல நாடுகளை வைத் திருக்கிறார்கள் என்ற காரணத்தைச் சுட்டிக்காட்டினார்கள்.

10-30 a.m.

நமக்கு தெரியும், கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தின்கீழ் இருக்கின்ற நாடுகள் எப்படி நடத்தப்படுகின்றன என்று. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின்கீழ் எப்படி நாடுகள் இருக்கின்றன? காலனி ஆட்சி என்று சொன்னால் வைசிராய் ஒருவர் இருக்கிறாரே தவிர, கனடா, ஆஸ்ட்ரேலியா, நியுசிலாந்து—தென் ஆப்பிரிக்கா ஒரு இடத்தைத் தவிர மற்றயிடங்களில் அவர்கள் நிர்வாகத்தில் எதிலும் தலையிடுவது கிடையாது. எப்படி நம் ஜனாதிபதி நமது நிர்வாகத்தில் தலையிடுவதில்லையோ, எப்படி பிரிட்டிஷ் ஆட்சியில் ராணி தலையிடுவதில்லையோ அந்த முறையில்தான் இருக்கிறார்கள். இதை ஆட்சேபிக்கிறார்களே, அவர்கள் ஆட்சியின்கீழ் இருக்கிற நாடுகளை, அவர்கள் காலனிகளை அவர்கள் எப்படி நடத்துகிறார்கள் என்பதை அவர்கள் கொஞ்சம் சீர்தூக்கிப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதற்கு நாம் கப்பல் ஏறி பல தூரம் போக வேண்டியதில்லை. நமது எல்லையில் உள்ள அவர்கள் ஆதிக்கத்தின் கீழ் இருக்கிற திபேத்தை எடுத்துப் பார்த்தால் தெரியும். அங்கிருந்த தலைவர் நம்மிடம் இப்பொழுது அடைக்கலம் புகுந்திருக்கிறார்கள். திபேத் நாட்டின் தலாய் லாமா இன்று எப்படியிருக்கிறார்கள் என்று பார்த்தால் தெரியும். திபேத் நாட்டின் தலாய் லாமா ஒரு அரசியல் தலைவர் மட்டுமல்ல, மதத் தலைவரும்கூட. அவர்களுக்கு என்ன மரியாதை காட்டப்படுகிறது? கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தின்கீழ் உள்ள நாட்டிற்கு என்ன மரியாதை கொடுத்திருக்கிறார்கள் என்ற விஷயத்தை கொஞ்சம் அறிந்த அவர்களுக்கு நான் அதிகமாகக் கூறத் தேவையில்லை. திபேத் நாட்டு மக்கள் இன்று சூ-என்-லாய்க்கு இந்தமாதிரி வரவேற்பு அளித்து, வா என்று அழைக்கிற நிலையில் அவர்கள் இருக்கிறார்களா என்று சிந்தித்துப் பார்க்கும்படி அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன், இதை ஆட்சேபிப்பவர்களை. அவர்கள்தான் அங்கு இதேபோன்ற ராஜ உபசாரத்தில் வர முடியுமா? அல்லது இந்தத் தலைவர்கள்தான் அங்கு போவதற்குள்ள ஒரு நிலையிருக்கிறதா? இதுபற்றி நாம் அதிகமாக கூறத்தேவையில்லை. இதற்காக மாட்சிமை தங்கிய அரசியாருக்கு வரவேற்பு அளிப்பது பற்றி கவர்னர் அவர்கள் உரையில் குறிப்பிட்டிருப்பது குறித்து அவர்கள் கிண்டலாக பேசியிருக்க வேண்டாம் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, வெள்ளம் வந்ததைப் பற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள். அதில் ஒரு சந்தோஷப்படத் தகுந்த விஷயம் வெள்ளம் அடித்துக்கொண்டிருக்கிறபோதே அது முடிவதற்கு முன்னதாக கனம் அமைச்சர்கள் இரண்டு பேர்கள் அந்த பகுதிகளுக்கெல்லாம் வந்து பார்த்து அவர்களுக்கு ஆறுதல்கூறி, உடனே வெள்ளம் வடிவதற்கான முயற்சிகள் எடுத்து, சேதம் அடைந்த பகுதிகளுக்கு உடனடியாக மறுவிவசாயம் செய்ய விதை, உரம் அதற்கு வேண்டிய நிதி அத்தனையும் கொடுத்து, அந்தப் பகுதிகளிலுள்ள நிலங்கள் அனைத்தும் உடனே விவசாயம் செய்கிற நிலையை ஏற்படுத்திக் கொடுத்ததை அந்தப் பகுதி மக்கள் மறக்கவே மாட்டார்கள். துன்பத்தில் நட்பை என்றும் மறக்கக்கூடாது என்பதற்கிணங்க, அதாவது வள்ளுவர் கூறியிருப்பதைப் போன்று,

23rd January 1961] [Sri A. Vedarathnam]

"மறவற்க மாசற்ருர் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு."

என்று வள்ளுவர் கூறியிருப்பதை அவர்கள் மனதில் வைத்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதை நான் இங்கு தெரிவிக்க விரும்புகிறேன். விவசாயம் சம்பந்தமான இரண்டொரு விஷயங் களைக் கூற விரும்புகிறேன். உணவு விஷயம் நமக்கு முக்கியமான விஷயமாகிவிட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் அதை கடந்து விட்டதாக நினைத்து இரண்டு லட்சம் டன் வெளிநாட் டிற்குகூட ஏற்றுமதி செய்தோம், ஆறு அவுன்ஸ்க்கு தாளம் போட்டுக் கொண்டிருந்த நாம், பிரஜா உற்பத்தியின் வேகம் உணவு உற்பத்தியின் வேகத்தைத் தாண்டி வந்துவிட்டதால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைக்கூட மாற்றியமைக்கும் படியாக நேர்ந்தது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதற்கு முதலிடம் கொடுக்க வேண்டிய ஒரு நிலையும் வந்து இருக்கிறது. இப்படியிருக்கிற நிலையில் தஞ்சை ஜில்லா என்று சொன்ஞல் அது முழுவதும் அப்படியே பாசன வசதி நிறைந்த ஒரு சோழநாடு என்றுதான் எல்லோரும் நினைக் கிருர்களே தவிர ராமநாதபுரம் பகுதியை போன்ற பகுதிகள் அங்கு இருக்கின்றன என்ற விஷயத்தை மறந்து விடுகிருர்கள். தஞ்சை ஜில்லாக்காரன் ஏதாவது வசதி வேண்டுமென்று கேட் டால் தஞ்சைக்காரன் இப்படிக் கேட்கிருனே என்று நகைக் கிருர்கள். தஞ்சைக்கு பருத்தி ஆலை ஏதாவது உண்டா என்று நான் கேள்வி நேரத்தில் ஒரு கேள்வி கேட்டபோது இங்குள்ள அங்கத்தினர்கள் அத்தனை பேர்களும் சிரித்தார்கள். அமைச்சர் அவர்கள் அங்கு ஒரு நூற்பு ஆலை வருகிறது என்று சொன்னவுடன் அதைவிட அதிகமாக சிரித்தார்கள். தஞ்சை ஜில்லா என்று சொன்ஞல் நெல்லைத் தவிர வேறு ஒன்றுக்கும் லாயக்கில்லை, எல்லாயிடங்களிலும் அது பூர்ணமாகயிருக்கிறது என்ற எண்ணத்தைத்தான், அமைச்சர்கள்கூட கொண்டிருக்கிருர்கள். அவர்கள் பகுதிகள் போன்று அங்கும் வறண்ட பகுதிகள் இருக் கின்றன. நாகலோகம் வரை போய் கேணிக்கு தண்ணீர் பாய்ச்ச வேண்டியதில்லை, கடலில் விழுகப் போகும் தண்ணீர் நாலு அடி உயரமாகயிருப்பதால் லிப்ட் இரிகேஷன் மூலம் பாசனவசதி கொடுக்க வேண்டுமென்று கோரி அகிலயிந்தியாவில் முதன் முதலாக அங்குதான், அந்தப் பகுதியில்தான் லிப்ட் இரிகேஷன் சர்க்கார் லெவலில், தங்கள் சொந்த தோட்டங்களுக்காக அநேகர் பம்ப் செட்ஸ் வைத்திருக்கலாம், ஆனல் சர்க்கார் துறையில் பாசன வசதி அளிக்கிற முதல் பரிட்சை அங்குதான் நடந்தது. அது நன்கு சிறந்த பலனை அளித்து வருகிறது என்ற விஷயத்தை அமைச்சர்கள் ஒவ்வொருவரும் வந்து பார்த்திருப்பார்கள். 40 கிராமங்களுக்கு கிட்டத்தட்ட 45,000 ஏக்கருக்கு பாசனம் கொடுக்க வேண்டியது பாக்கியாக இருக்கிறது. அதற்கான திட்டங்களை எடுத்துக் கொண்டுதான் இருக்கிருர்கள். ஆனல் இதில் ஒரு சிரமம் இருக்கிறதென்று சொன்ஞல், அரசாங்கம் எங்கள் குறைகளை உணரும்படி சொல்வது தவறல்ல. அதை ஒரு குற்றச்சாட்டு என்று யாரும் கருதமாட்டார்கள். வேலைகளை

எடுத்துச் செய்யும்போது, வேலை நடக்கும் இடத்தில் இது விரைவாக நடக்கமாட்டேன் என்கிறது. இதற்கு ஒரு வழி கண்டு பிடித்து வழி செய்யவேண்டுமென்று சொல்கிறேனே தவிர முயற்சியில் குறையிருப்பதாக சொல்லவில்லை.

"நெடுநீர் மறவி மழுதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்."

என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். மறவியில்லை, மடியில்லை, இதெல்லாம் இல்லை. நெடுநீர், காலம் நீட்டி, ஒரு வருடத்தில் முடிக்க வேண்டிய திட்டத்தை ஐந்து ஆண்டுகளுக்கு நீட்டுகிற விஷயம் இருக்கிறதே அதை நீக்க அரசாங்கம் உடனடியாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டும். இந்தத் திட்டத்தை செய்யவேண்டுமென்று கேட்டால் அரசாங்கம் உடனே உத்தர விட்டு விடுகிறார்கள். ஆனால் அவை நிறைவேற பல ஆண்டுகள் நீண்டுகொண்டே போகிறது.

இந்த மாதிரி நிர்வாகத்தை நடத்துகின்ற மெஷினரி மெதுவாக போகாமல், ஏதாவது பரிகாரம் செய்ய வேண்டுமென்றால் அதையும் செய்து துரிதமாக வேலை நடப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இந்தக் குறைபாட்டை நீக்கினால் குறைந்தது ஒன்றரை லட்சம் டன் அளவு தான்யம் அதிகமாக கிடைக்கும். 10 லட்சம் ரூபாய் செலவு செய்தால் 50 ஆயிரம் ஏக்கர் நிலங்கள் அதிலும் பழைய நஞ்சை நிலங்கள் பாசனத்திற்கு வரும். அதிலும் இந்த நிலங்கள் நல்ல நிலங்கள் பழைய டெல்டா நிலங்களைப்போன்றே இருப்பதால், இதை யுத்த கால நடவடிக்கையாக கருதிக்கூட நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லுவதுகூட தவறு அல்ல என்று நினைக்கிறேன். ஆகவே இதில் முக்கியமாக உடனடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மின்சாரம் சம்பந்தமாக, நமது மாகாணம் மிகவும் முன்னேறியிருக்கிறது. நமது மாகாணம் இந்தியாவில் மூன்றாவது இடத்தில் இருந்தது, இப்போது இரண்டாவது இடத்திற்கு வந்திருக்கிறது. இன்னும் குந்தாத் திட்டம் முழுவதிலும் உற்பத்தி ஆரம்பித்து விட்டால் நமது மாகாணம் முதல் ஸ்தானத்தை அடைந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. அவ்வளவு வேகமாக அகில இந்தியாவிலேயே நமது மாகாணம் முன்னேறிக் கொண்டு வருகிறது. இதைப்பார்த்து நாம் எல்லோரும் சந்தோஷமடைகிறோம். ஆனால் இதில் தஞ்சை ஜில்லா மட்டும் நீங்கலாக என்றுதான் ஒரு பகுதியை சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் என்னுடைய கோரிக்கை. நம் மாகாணத்தில் எங்கள் ஜில்லா தாயில்லாப் பிள்ளையாகத்தான் கருதப்பட்டு வருகிறது. இதை முதல் அமைச்சர் அவர்களே ஒத்துக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த வரை மின்சார அபிவிருத்தி குறைவாகத் தான் இருக்கிறது. இதை அமைச்சர் அவர்களே ஏற்றுக்கொண்டிருக்கிறார் என்கிற விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன்.

23rd January 1961] [Sri A. Vedarathnam]

அகில இந்தியாவிலே நல்ல முறையில் முன்னேறிக் கொண்டு வரும் போது, தஞ்சை ஜில்லாவிற்கு மட்டும், அதிலும் இந்த மாகாணத் திற்கே பூரா உணவையும் அளிக்கிற தஞ்சை ஜில்லாவுக்கு, அங்கு இருட்டில் இருக்கக்கூடிய மக்களை வெளிச்சத்திற்கு கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன், ஆகவே இந்த விஷயத் தில் தஞ்சை ஜில்லாவிற்கு முதலிடம் கொடுக்கவேண்டுமென்று மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பெரிய தொழில்களை எடுத்துக்கொண்டால், நம்முடைய அரசாங்கம் வெளிநாடுகளில் இருந்து ஏராளமான கடன்களை வாங்கி கனரகத்தொழில்களை ஏற்படுத்துகிறார்கள் என்றும், இம்மாதிரி கடன் வாங்குகின்ற கொள்கையைப் பற்றி கண்டிக்கிற முறையில் எதிர்க்கட்சிக்காரர்கள் பேசி வருவதை நாம் பத்திரிகைகளில் பார்க்கின்றோம், இதற்கு நான் ஒரு சிறிய விஷயத்தைக் கூற விரும்புகிறேன். இப்போதுதான் நமது நாட்டில் இரண்டு மூன்று உருக்குத் தொழிற்சாலை ஆரம்பித்து வேலை நடந்து கொண்டிருக்கிறது. இப்படியிருக்கின்ற நிலையில் இவ்விதம் ஆரம்பித்து ஓராண்டு காலத்திற்குள்ளாகவே அந்நிய நாட்டு செலாவணியில் 100 கோடி ரூபாய் மிச்சப்படுத்தியிருக் கிறோம் . அப்படியானால் நாம் கடன் வாங்குவதில் என்ன தவறு இருக்கிறது என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். குறிப் பாக இதைப்பற்றி குறை சொல்லுகின்றவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மற்ற தொழில்களை எல்லாம் விட்டு விடலாம், இப் போது ஆரம்பிக்கப்பட்டிருக்கும் இந்த மூன்று உருக்காலைகளை மட்டும் எடுத்துக்கொண்டாலே கழிந்த ஓராண்டு காலத்திற்குள் 100 கோடி ரூபாய் மிச்சப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே இதே மாதிரி இன்னும் பல தொழில்களை நாமே எந்த நாட்டிலிருந் தாவது கடன் வாங்கி நடத்த ஆரம்பித்து விட்டால் நாம் வெளி நாட்டு செலாவணியையே எதிர்பார்க்கவேண்டிய நிலை ஏற் படாது. ஆகவே நமது சக்திக்குத் தகுந்தவாறு இம்மாதிரி வெளி நாட்டு செலாவணியை மிச்சப்படுத்தக்கூடிய வகையில் தொழில் களை ஆரம்பிப்பதற்காக வெளிநாடுகளிலிருந்து கடன்களை வாங்கு வதில் என்ன தவறு இருக்கிறது என்ற விஷயத்தை நான் கேட்க விரும்புகிறேன். இதிலும் தஞ்சை ஜில்லாவைப் பொறுத்தவரை ஒரு விஷயத்தை நான் குறிப்பிட விரும்புகிறேன். அங்கு ஏராள மாக உப்பளம் இருக்கிறது. சுமார் 150 சதுர மைல் உப்பளம் இருக்கிறது. இந்தியா முழுவதிற்கும் உப்பு வழங்கப் போதிய உப்பு அங்கு இருக்கிறது. இன்னும் ஜப்பான், இந்தோனேசியா போன்ற நாடுகளுக்கு உப்பு ஏற்றுமதி செய்வதற்கு ஒரு தம்பிடிகூட செலவில்லாமல் உற்பத்தி ஆகிக்கொண்டிருக் கிறது. இப்பேர்ப்பட்ட இடத்தில் ஒரு கனரகத் தொழிற் சாலை ஏற்படுத்தலாம், இதற்காக ஒரு கோடி ரூபாய் சர்க்கார் கொடுக்கத் தயாராக இருக்கிறது. ஆனால் அதை எடுத்து தனி யார் துறையில்தான் ஒரு தொழிற்சாலையை நடத்த வேண்டும் என்று தொழில் அமைச்சர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். இம்மாதிரிப்பட்ட இடத்தில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்த

வேண்டுமென்ருல் சுமார் 2 கோடி ரூபாய் மூலதனம் போட வேண்டும் என்று தெரிகிறது. ஆகவே இதை அரசாங்கத் துறையிலிருந்தோ அல்லது கூட்டுறவு முறையிலோ இந்த தொழிலை நடத்த முன் வந்தால், ஜிப்சம், மாங்னீசம், அயோடின் புரொமெயின் போன்ற விலையுயர்ந்த பல பொருட்களை உற்பத்தி செய்வதற்கு சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. தங்கத்தைவிட விலையுயர்ந்த பல பொருட்களை உற்பத்தி செய்வதற்கு வசதியிருக்கின்ற காரணத்தினுல் நிச்சயமாக இதை இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். (மணியடிக்கப்பட்டது) இன்னும் சொல்வதற்கு பல விஷயங்கள் இருக்கின்றன, மணியடிக்கப்பட்டு விட்டது. ஆகையினுல் சுருக்கமாகச் சொல்லுகிறேன். வாட்டர் வேஸ் கமிஷன் நம் நாட்டிலுள்ள வசதிகளை ஆராய்ந்து பார்த்து படகு போக்குவரத்துக்காக பல ஆறுகளை சிபாரிசு செய்திருக்கிருர்கள். அந்த சிபாரிசு அரசாங்கத்திற்கு வந்திருக்கும் என்று நம்புகிறேன். பக்கிங்காம் கனலை சீர்படுத்தி, காக்கிநாடாவிலிருந்து கோடிக் கரை வரை இணைத்து விட்டால் போக்குவரத்துக்கு மிகவும் வசதியாக இருக்கும். போக்குவரத்து சாதனங்களில் தண்ணீர் மூலமாக போக்குவரத்தை நடத்துவதுதான் மலிவானது என்பதை எல்லோரும் அறிவார்கள். இந்தக் கட்டணத்தில் வேறு வாகனத்தில் பொருட்களை ஏற்றிச்செல்ல முடியாது. ஆகவே இந்த போக்குவரத்தை சீர்படுத்த வேண்டுமானுல் அந்த 'கனலிலுள்ள' சில்ட் எடுக்கவேண்டும். இதற்காக "டிரெட்ஜர்" என்கிற இயந்திரத்தை வாங்கி கொடுக்கவேண்டும். ஆகவே வருகின்ற திட்டத்தில் இதை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, தூத்துக்குடி துறைமுக விஷயம் பெரிய சமாச்சாரமாக இருந்துகொண்டிருக்கிறது. இம்மாதிரி பெரிய விஷயத்தை எடுத்து நடத்துகிற நேரத்தில் நான் முன்னுல் குறிப்பிட்ட திட்டத்தை சிறிய விஷயமாக கருதி விட்டுவிடக்கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன். மைனர் போர்ட்களை எல்லாம் சரியான முறையில் போக்குவரத்துக்கு பயன்படும்படியான முறையில் சீர்திருத்த வேண்டும். இவ்விதம் எல்லா மைனர் போர்ட்டுகளையும் சீர்திருத்தி ஒரு கோஸ்டல் ட்ராபிக்கை நேர் பாதையாக ஏற்படுத்த வேண்டும், அதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொண்டு இத்தனை நேரம் பேசுவதற்கு அவகாசம் அளித்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**SRI S. M. ANNAMALAI :** கனம் தலைவர் அவர்களே, சட்டமன்றத்தின் முன்னுல் கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரை மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இன்று காலை நடந்த கேள்வி நேரத்தின்போது கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள், கார்ப்பரேஷனுக்கு பணம் கொடுத்திருக்கிறோம், அதை இன்னும் வாங்கவில்லை என்றும்,

வாங்கின பணத்தை இன்னும் உபயோகிக்கவில்லை என்றும் சொன்னார்கள். நான் தயவுசெய்து நிதி அமைச்சர் அவர்களிடத்தில் கேட்டுக்கொள்கிறேன், கார்ப்பரேஷனுக்கு சர்க்கார் இந்தத் தொகையை எப்போது சாங்ஷன் செய்தார்கள்? அந்த விபரம் கார்ப்பரேஷனுக்கு எப்போது தெரிவிக்கப்பட்டது? சர்க்கார் இதற்கு சாங்ஷன் செய்து கார்ப்பரேஷனுக்கு தெரிவிப்பதற்கு மூன்று மாதங்களாகியது. இது யாருடைய பிழை என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மூன்று மாதங்கள் கழித்து கார்ப்பரேஷனுக்கு தெரியப்படுத்திவிட்டு, இப்போது கார்ப்பரேஷன் சரியாக பணத்தை வாங்கவில்லை என்று எப்படி கார்ப்பரேஷனை குறை சொல்ல முடியும்? அதைப்போலவே இதற்கு முன்னால் கார்ப்பரேஷனில் ஆட்சி செலுத்திக்கொண்டிருந்த காங்கிரஸ் கட்சிக்காரர்கள் 17 ஆயிரம் ரூபாய் கொடுத்து ஃபிஷர் என்கிற ஓர் இயந்திரத்தை வாங்கினார்கள். அந்த இயந்திரம் 10 ஆண்டுகளுக்கு முன்னால் வாங்கப்பட்டது. அதை எப்படி எப்படி உபயோகப்படுத்தவேண்டும் என்று தெரிந்துகொள்ளாமல் 10 ஆண்டுகளாக அப்படியே விட்டு விட்டதின் காரணமாக இப்போது அதை இரவு நேரங்களில் உபயோகப்படுத்துவதற்கு முடியாத நிலையில் இருந்து கொண்டிருக்கிறது. அதற்குமேல், இப்போது கார்ப்பரேஷனுக்கு கடன் கொடுக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டதின் பின்னால், உடனடியாக இந்த வேலையை நடத்தி முடிக்கவேண்டும் என்ற எண்ணத்தில், கார்ப்பரேஷன் ஏற்று நடத்தினால் உடனடியாக முடிக்க முடியாது என்று கருதி கான்ட்ராக்ட் மூலம் இரவு பகலாக வேலை நடத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் வேலை நடந்து கொண்டு வருகிறது. கார்ப்பரேஷனுக்கு 15 லட்சம் ரூபாய் கடனாக கொடுப்பதாக சொல்லுகிறார்கள். இது தவிர கிராண்ட் கொடுப்பதாகவும் சொல்லுகிறார்கள். கிரான்டை வேண்டுமானால் சீப் இன்ஜினியரின் அனுமதி கிடைத்த பின்னால் கொடுக்கலாம், ஆனால் கடனை முன்னால் கொடுக்கலாம் அல்லவா, அதுவுமல்லாமல் பாதையை செப்பனிட்ட பின்னால்தான் பணம் தருவோம் என்று கண்டிஷனையும் போட்டுவிட்டு, கார்ப்பரேஷன் பணத்தை வாங்கவில்லை என்று, அதை உபயோகித்துக்கொள்ளவில்லை என்று பொறுப்புள்ள ஒரு அமைச்சர், அதிலும் அரசாங்கத்தின் முக்கிய பொறுப்பில் இருக்கின்ற ஒரு நிதி அமைச்சர் கூறுகிறார் என்றால், உண்மையிலேயே அது மிகவும் வேதனைக்குரிய விஷயமாகத்தான் இருக்கிறது. ஆகையால், எனக்குக் கூடத் தெரியும், சர்க்கார் ஒரு திட்டத்தை எடுத்துச் செய்யும்போது எத்தனை ஆண்டுகள் ஆகின்றன என்று. ஒரு கிணறு வெட்டவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொண்டால், அந்த அதிகாரி பார்க்கவேண்டும், இந்த அதிகாரி பார்க்கவேண்டும் என்று ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் ஆகக்கூடிய நிலையில் நிர்வாகத்தில் எவ்வளவு ஊழல்கள் இருக்கின்றன என்று ரெக்கார்ட் மூலமாக என்னால் நிரூபிக்க முடியும். கார்ப்பொரேஷன் உடனடியாக எடுத்துச் செய்யவில்லை, அந்தப் பணத்தை வாங்கவில்லை என்று அவர்களைப் பற்றிக் குறை கூறுவது என்று. சொன்னால், மாற்றுக் கட்சிக்காரர்கள் கார்ப்

[Sri S. M. Annamalai] [23rd January 1961

பொரேஷனில் இடம் பெற்றுவிட்டார்கள். அவர்கள் பேரில் எப்படியாவது குறை சொல்லவேண்டுமென்ற ஒரே நோக்கம் தவிர வேறு என்ன இருக்க முடியும்? வேண்டுமானால் கனம் நிதி அமைச்சர் அவர்கள் விளக்கமாக பதில் அளிக்கட்டும். எந்தக் காலத்தில் கார்ப்பொரேஷனுக்கு பணம் ஸாங்ஷன் செய்தோம், கார்ப்பொரேஷனுககு எப்போது அது தெரிவிக்கப்பட்டது, ஏன் சீப் என்ஜினீயர் பார்த்துத்தான் கொடுக்கவேண்டுமென்று வைத்திருக்கிறார்கள் என்று விளக்கம் கொடுக்கட்டும். கார்ப்பொரேஷனுக்கு வேண்டிய யந்திரங்கள் வாங்கப்படாததற்கு யார் காரணம்? இன்றையதினம் ஒரு 400 டன் மிக்ஸர் யந்திரம் வாங்குவதற்கு அந்நியச் செலாவணி தேவையாயிருக்கிறது. அதற்கு இடம் கிடைக்கவில்லை. யந்திரங்கள் வாங்குவதற்கு கார்ப்பொரேஷனுக்கு இடம் கொடுக்காமல் இருப்பதால், அந்த யந்திரங்கள் இருந்தால்தான் இரவு பகலாக வேலை செய்ய முடியும் என்று கார்ப்பொரேஷனுக்குத் தெரிந்ததன் காரணமாக, நாமாகச் செய்வதை விட காண்டிராக்ட்டுக்கு விட்டுச் செய்யலாம், முன்பு ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் யந்திரங்களை வாங்கத் தவறிவிட்டார்கள், ஆகையால் கார்ப்பொரேஷனினால் செய்ய முடியாது, எவ்வளவு சீக்கிரத்தில் செப்பனிட முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் செப்பனிட்டாகவேண்டும் என்ற பொறுப்பை உணர்ந்து, காண்டிராக்ட்டுக்கு விட்டால்தான் இரவும் பகலுமாகச் செய்ய முடியும் என்று ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதை விட்டு கார்ப்பொரேஷனில் மாற்றுக் கட்சிக்காரர்கள் இருக்கிறார்கள் என்ற காரணத்தினால் தங்களுடைய பொறுப்பைத் தட்டிக் கழிக்கப் பார்த்தால் அதை மக்கள் தெரிந்துகொள்வார்கள் என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்.

அடுத்தபடியாக கவர்னருடைய உரையிலே உணவுப்பொருள்களின் விலைவாசியானது குறைந்திருக்கின்றது என்று சொல்லியிருக்கிறார்கள். எப்படிக் குறைந்திருக்கிறது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இப்போதுகூடப் பார்த்தால் சென்ற ஆண்டு இதேகாலத்தில் சம்பா அறுவடைக்குப் பிறகு 25-26 ரூபாய்க்கு கிச்சலிச் சம்பா விற்றுக்கொண்டிருந்தது. இந்த ஆண்டு 31-32 ரூபாய்க்கு விற்கிறது. அப்படி இருக்கும்போது கவர்னர் உரையில் விலைவாசி குறைந்துகொண்டு வருகின்றது என்று சொல்வது அவ்வளவு உண்மையல்ல என்பதை நான் இந்தச் சட்ட மன்றத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். நேற்றுக்கூட உள்துறை அமைச்சர் அவர்கள் விலைவாசி உயர்ந்து கொண்டு போகிறது, அதுவும் பொருளாதார ரீதியில் உயர்ந்து கொண்டு போகின்றது என்று நாங்கள் அறிந்து கொண்டிருக்கிறோம், இதைப்பற்றி ஒரு முடிவிற்கு வந்த பிறகு இதை எப்படி கட்டுப்படுத்த முடியும் என்ற முடிவுக்கு வருவோம் என்று சொன்னார்களேயொழிய, உணவுப்பொருள்களின் விலை குறைந்துகொண்டு வருகிறது என்று அவரால் தைரியமாகச் சொல்ல முடியவில்லை. அப்படியிருக்கும்போது கவர்னர் அவர்கள் குறைந்து கொண்டிருக்கிறது என்று சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, சேலம் இரும்பு. இதைக் குறித்து நெய்வேலி நிலக்கரி பயன்படுமா என்பதை ஆராய்ச்சி செய்து முடிவிற்கு வந்தபிறகுதான் சொல்லமுடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதேயே கிழக்கு ஜெர்மனிக்காரர்கள் ஆராய்ச்சி செய்து பார்த்து விட்டு இரும்பு நன்ருக இருக்கிறது, இதற்கு நாங்கள் உதவி செய்யத் தயாராக இருக்கிறோம், சர்க்கார் ஆரம்பிக்க ஒப்புக் கொண்டால் வேண்டிய உதவி செய்யத் தயாராக இருக்கிறோம் என்று திட்டவட்டமாக சொல்லியிருக்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சொல்லுவதை நன்ருகப் படித்துப் பார்த்துச் சொன்னல் நல்லது. அவர்கள் சொல்லி யிருப்பது, பூர்வாங்கமாகப் பார்த்ததில் செய்ய முடியும். இதற்கு மேலும் பரிசிலனை செய்ய 2,000 டன் அந்த நிலக்கரி அவர்களுக்குக் கிடைக்குமானல் இன்னும் பெருமளவுக்கு ஆராய்ச்சி செய்து திட்டவட்டமாகக் கூற முடியும் என்பதுதான்.

SRI S. M. ANNAMALAI : நான் பத்திரிகையில் பார்த்த பிறகு தான் சொல்லுகின்றேன். அதே சமயத்தில் பொஹாரோ என்ற இடத்தில் இரும்புத் தொழிற்சாலே ஆரம்பிக்க பிற நாட்டவர்கள் முன் வரவில்லை. அதிகச் செலவிட்டுச் செய்யவேண்டியிருப்பதன் காரணமாக மத்திய சர்க்கார் பகுதி பகுதியாக, பிற நாட்டு உதவி கிடைக்காவிட்டாலும் கூட உடனடியாக ஆரம்பிக்கப் போகிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். அப்படி இருக்கும் போது, சேலம் இரும்புத் தொழிற்சாலையை ஆரம்பிக்கவேண்டு மென்று எத்தனே ஆண்டுகளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம் இந்தச் சட்ட மன்றத்தில்" ஆகவே துரிதப்படுத்தி உடனடியாக ஏன் ஆரம்பிக்கக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

அதைப்போலவே, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிருர்கள். அதிலே 190 கோடி ரூபாய் மத்திய சர்க்கார் தரப்போகிருர்கள் என்று சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். 190 கோடி ரூபாய் மத்திய சர்க்கார் தருவதாக இருக்கலாம். அதேசமயத்தில் நிதி அமைச்சர் அவர்கள் சொல்லுகிருர்கள், நமது மாநிலத்திற்குரிய பங்கு கிடைத்து விட்டது என்று. அவர்கள் மிகவும் பெருமையோடு சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். சர்க்கார் மூலமாக ஒரு புள்ளிவிவரம் வந்திருக்கிறது. மாநில வாரியாக எவ்வளவு கேட்டார்கள், அதிலே எவ்வளவு ஒதுக்கியிருக்கிருர்கள் என்ற புள்ளிவிவரம் கொடுத்திருக்கிருர்கள். அதைப் பார்க்கும்போது நம் மாநிலத்திற் குரிய பங்கைத் தந்து விட்டார்கள் என்று சொல்ல முடியும். ஆனல் ஒன்று கேட்கிறேன். மத்திய சர்க்கார் மூலமாக பிற மாநிலங் களில் எத்தனே தொழிற்சாலேகள் எவ்வளவு கோடி ரூபாயில் ஆரம்பித்திருக்கிருர்கள்? மத்திய சர்க்கார் ஆரம்பித்திருக்கக் கூடிய தொழிற்சாலேகளில் நம் மாநிலத்தில் உள்ளது எவ்வளவு? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எத்தனே பெரும் தொழிற் சாலேகளே ஆரம்பிக்க மத்திய சர்க்கார் தயாராக இருக்கிருர்கள்? அதிலே மற்ற மாநிலங்களில் எத்தனே தொழிற்சாலேகளே

ஆரம்பிக்கப் போகிருர்கள் ? இந்த மாநிலத்தில் எத்தனை ஆரம்பிக்கப்போகிருர்கள் ? இந்தப் புள்ளிவிவரங்களை தயவு செய்து சட்ட மன்றத்தில் வைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். வேண்டுமானுல் பெருமையோடு சொல்லிக்கொள்ளுங்கள், நாங்கள் கேட்டது இவ்வளவு, நமக்குக் கிடைத்தது இவ்வளவு; பிற மாநிலங்கள் கேட்டது இவ்வளவு; அவர்களுக்குக் கிடைத்தது இவ்வளவுதான்; நம்முடைய பங்கு சரியாக வந்து விட்டது, ஆதலால் பெருமையடைகிருேம் என்று சொல்லிக்கொள்ளலாம். பிற மாநிலங்களில் மத்திய சர்க்கார் எத்தனை கோடி ரூபாயில் எத்தனை பெரிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கப் போகிருர்கள், இந்த மாநிலத்தில் எத்தனை கோடி ரூபாயில் எத்தனை பெரிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கப் போகிருர்கள் என்று தயவு செய்து சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறன்.

அதைப் போலவேதான் 10,200 கோடி ரூபாயில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் போட்ட நேரத்தில் 398 கோடி ரூபாய் நம் மாநிலம் கேட்டும், தருகிறேன் என்று சொன்னது 190 கோடி ரூபாய். இப்போது பிளானிங் கமிஷன் 12,000 கோடி ரூபாயில் மூன்ருவது திட்டத்தைப் போடப்போகிருேம் என்று தொகையை அதிகமாக்கியிருப்பதன் காரணமாக நமது மாநிலத்திற்கு என்ன கிடைக்கவிருக்கிறது ? 12,000 கோடியாக அதிகரித்திருப்பதை முன்னிட்டு வீதாசாரப்படி என்ன கேட்டிருக்கிறது என்ன கிடைக்க இருக்கிறது என்று தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நம் திட்டம் 398 கோடி என்று போட்டு, மத்திய சர்க்கார் 190 கோடி கொடுக்கும்போது பாக்கி ரூபாயை நாம் செலவழிக்கவேண்டுமென்று கூறியிருக்கிருர்களே, மறைமுகமான வரி ஏதாவது விதிக்க இருக்கிறீர்களா, என்ன வரி விதிக்க இருக்கிறீர்கள் என்று கேட்க விரும்புகிறேன். அப்படி ஏதாவது வரி விதிக்க முற்பட்டால் பெரும் புரட்சி ஏற்படப் போகிறது, மக்கள் அதற்குத் தயாராக இருக்கிருர்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

விவசாயத் தொழிலாளர்களுடைய "பர் காபிடா இன்கம்" என்ன என்று ஆராய்ந்திருக்கிருர்கள். 1950-51-ம் ஆண்டில் பர் காபிடா இன்கம் 104-ஆக இருந்தது. 1958-59-ல் 99 ரூபாயாகக் குறைந்து போயிருக்கிறது. இது உண்மையில் வருந்தத் தக்க விஷயமல்லவா என்று சிந்திக்க வேண்டாமா ? அதுவும் தவிர, பல ஆயிரம் கோடி ரூபாய்கள் முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செலவு செய்து விட்டு, பல ஆயிரம் கோடி ரூபாய்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செலவு செய்துவிட்டு, 12,000 கோடி ரூபாய் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் செலவு செய்யவிருக்கிருேம். அதே சமயத்தில் மறைமுகமான வரிகளை விதிக்கத் தயாராக இருக்கிருேம் என்று சொன்னுல், இதுவரையில் செலவழித்த பணம் எங்கே போயிற்று ? சாதாரண விவசாயத் தொழிலாளியுடைய பர் காபிடா இன்கம் 104 ரூபாயிலிருந்து 99 ரூபாய்க்குக் குறைந்து விட்டது. இவ்வளவு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட பிறகும்கூட பர் காபிடா இன்கம்

23rd January 1961] [Sri S. M. Annamalai]

அதிகமாகவில்லை. 1950-51-ஆண்டில் 4½ அணுவாக இருந்தது. இப்பொது 4 அணுவாகக் குறைந்திருக்கிறது. ஆக, நாட்டிலே ஒரு பெரும் புரட்சி ஏற்படுவதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது என்று சொல்லிக்கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

* SRI K. B. S. MANI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த சபையில் கவர்னர் பெருமான் ஆற்றிய உரையை ஆதரித்து ஒரு சில கருத்துக்களை நான் கூற விரும்புகிறேன். மதிப்பிற்குரிய கவர்னர் பெருமான் அவர்களின் உரை மிகச் சுருக்கமாகவும், தெளிவாகவும் இருந்தது. ஆனால் இந்த நாட்டில் ஏற்படக்கூடிய பெரிய முன்னேற்ற பாதை ஒன்றை குறித்து எதுவும் குறிப்பிடவில்லை. இந்த நாட்டினுடைய தொழில் வளர்ச்சியும், பொருளாதார வளர்ச்சியும் சிறந்தோங்குவதற்கு என்னென்ன செய்ய வேண்டும், என்னென்ன செய்யப்படுகிறது என்பதைப் பற்றி வெகு அழகாக கூறியிருக்கிறார். ஒரு நாடு முன்னேற்றமடைய வேண்டுமானால், அந்த நாட்டில் உடைய பொருளாதாரமும் தொழிலும் வளர்ந்தால்தான் முன்னேறமுடியும் என்பது பலப் பெரிய நிபுணர்களின் கருத்து. மற்ற நாடுகளிலிருந்து தெரிந்துக் கொண்ட உண்மையும் கூட. இதை அனுசரித்துத் தான் இந்த நாட்டு அரசியலாரும், மத்திய அரசியலாரும் ஆக வேண்டியவைகளை செய்து வருகிறார்கள். எனினும் மற்றைய நாடுகளோடு நம்முடைய நாட்டை ஒத்திட்டுப் பார்க்கும்போது நம் நாட்டினுடைய தொழில் முன்னேற்றம் பெருகுவதற்கு போதுமான தொழில் நுட்ப நிபுணர்களும் அதற்காக மூலதனமும் தேவைப்படுகிறது. மூலதனத்திற்கு பல கோடி ரூபாய் கடன் வாங்கினால் போதும். அதை நிறைவேற்றி விடலாம். ஆனால் அதே நேரத்திலே நாட்டில் மற்றைய வளர்ச்சிகளை பார்க்கும்போது, விவசாயிகளுக்கு விவசாயத்தை வளர்ப்பதற்கு வேண்டிய, அதற்கு போதுமான எருக்களை, அதற்குப் போதுமான நல்ல விஷயங்களை விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்வதற்கு நிபுணர்களும், அறிஞர்களும் தேவைப்படும். அதேபோல் தொழில் வளத்தைப் பெருக்குவதற்கும் நிபுணர்கள் தேவைப்படுகிறார்கள். இவர்களையெல்லாம் பல அந்நிய நாடுகளிலிருந்து கொண்டு வந்து விவசாயத்தையும் தொழிலையும் வளர்த்துவிட முடியும். ஆனால் இந்த நாட்டிலே பெரும் குறையாக இருக்கக்கூடியது, மிக பயங்கரமாக இருந்து வருவது தீண்டாமையாகும். இந்த நாட்டிலே தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டுமானால் வெளி நாடுகளிலிருந்து இயந்திரமோ அல்லது நிபுணர்களோ கொண்டு வந்தால் முடியாது. பல கோடி ரூபாய் செலவழித்தாலும் முடியாது. அதற்கான திட்டங்களை நமது அரசியலார் சட்டத்தின் மூலம் மட்டும் செய்யாமல், அதை நடைமுறையிலும் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

11.06 a.m.

[Sri K. B. S. Mani] [23rd January 1961

உதாரணமாக பல விஷயங்களை கூற முடியும். இந்த அரசாங்கம் முறையாக பல பெரிய நன்மைகளை பொதுமக்களுக்கு, குறிப்பாக தாழ்த்தப்பட்ட மக்களுக்கு செய்து வருகிறது. கடந்த பேய் மழையின் போது அரசாங்கம் தஞ்சை ஜில்லாவில் உள்ள பாதிக்கப்பட்ட மக்களுக்கு உபகாரம் செய்தார்கள். இந்த பேய் மழையின் காரணமாக தஞ்சை ஜில்லா மிகமிக பயங்கரமாக பாதிக்கப்பட்டது. அதிலும் அதிகப்படியாக சீர்காழி தாலூகா பாதிக்கப்பட்டது. இந்த தாலூக்காவை பொறுத்தவரையிலே அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்த போதும்கூட பல அபாயங்களை கண்டார்கள். கண்டு பெரிதும் வேதனைப்பட்டார்கள். உடனே அந்த மாவட்ட பெரிய அதிகாரிகளை கூப்பிட்டு நேரடியாகவும், உடனடியாகவும் நிவாரணம் அளிப்பதற்காக 60 ஆயிரம் ரூபாய்க்கு மேல் கொடுக்கப்பட்டது. ஆனால் அப்படி கொடுக்கப்பட்ட ரூபாய் முழுவதும் செலவழிக்கப்பட்டதா என்று பார்க்கும்போது அந்த ரூபாயிலே பாதிக்குமேல் செலவழிக்கப்படாமல் சர்க்காருக்கு திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஏன் பணம் திருப்பிக் கொடுக்கப்பட்டது என்பதை அரசாங்கம் புரிந்துகொள்ள வேண்டும். அரசாங்கம் ஏழைகளுக்கு, குறிப்பாக ஹரிஜனங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற மனத்தோடு பணத்தைக் கொடுத்தாலும் அரசாங்கத்தில் உள்ள அதிகாரிகள் மக்களுக்கு உதவி செய்யக்கூடிய வகையிலே இல்லாமல் இருக்கிறார்கள் என்பதை இந்த சபைக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மக்களுடைய அரசாங்கம் மக்களுடைய நலனுக்காக, மக்களிடமிருந்து பல வகையிலும் பணத்தை வசூல் செய்து அதை ஏழை மக்களுக்கு உதவ முன் வரும்போது அதிகாரிகள் அலட்சிய மனப்பான்மையுடன் இருப்பதுதான் இதற்கு காரணம். ஒரு அதிகாரி கடந்த வருஷம் செப்டம்பர் மாதம் என்று நினைக்கிறேன், மாயவரத்தில் நடந்த ஒரு ஆபீஸர்கள் கூட்டத்திலே, நாட்டிலே சர்க்கார் கொடுத்தால் அதனை கொடுக்க வேண்டும் என்று ஏதாவது நிபந்தனை இருக்கிறதா, இதெல்லாம் எலக்ஷன்காரர்கள் செய்யவேண்டியது என்றுகூட கூறியதாக கேள்விப்பட்டேன். இதை பார்க்கும்போது உண்மையிலேயே அதிகாரிகள் எவ்வளவு கல் நெஞ்சம் படைத்தவர்களாக ஈவு இரக்கம் அற்றவர்களாக அரசாங்கத்தின் போக்கை உணர்ந்து நடக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள் என்று பார்க்கும்போது மிக வேதனைப்படக்கூடிய நிலைதான் ஏற்படுகிறது. ஆகவே அரசாங்கம் செய்கின்ற ஒவ்வொரு காரியத்தையும் அதிகாரிகள் சரியாக செய்கின்றார்களா என்று பார்க்க வேண்டியது மிக முக்கியம். அந்த வகையிலே அரசாங்கத்தால் கொடுக்கப்பட்ட 60 ஆயிரம் ரூபாயில், 30 ஆயிரத்திற்கு மேற்பட்ட ரூபாய் ஏன் அரசாங்கத்திற்கு திருப்பிக் கொடுக்கப்பட்டது, திருப்பி கொடுக்கப்பட வேண்டிய அளவுக்கு அங்குள்ள மக்கள் சேதமடையவில்லையா என்பதை சிந்தித்து பார்க்க வேண்டும். இந்த மாதிரி நிலைமையை சீர்தூக்கி பார்க்கும்போது உண்மையிலே அங்கு பாதிக்கப்பட்ட மக்களில் பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள்தான் அதிகம். ஆகவே

23rd January 1961] [Sri K. B. S. Mani]

இந்த மக்களுக்கு உதவி செய்ய முடியாத நிலைமைதான் அங்கு இருக்கிறது என்பதை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன. அதோடு கடந்த ஆண்டு கவர்னர் பெருமான் செய்த உரையில் கூட பிற்பட்ட வகுப்பு மக்களைப் பற்றியோ அல்லது தீண்டாமை ஒழிப்பைப் பற்றியோ ஒரு சொல் கூட கூறவில்லை என்பதை மிக கஷ்டத்தோடு சொல்லிக் கொள்கிறேன். ஏனென்றால் இந்த நாட்டிலே தீண்டாமையை உடனடியாக தீர்த்துவிட முடியாது. அது அவ்வளவு சுலபமான காரியமும் அல்ல. தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்று பல காரியங்களை அரசாங்கம் மேற் கொண்ட போதிலுங்கூட, இன்னும் பல இடங்களிலே பழைய சட்டதிட்டங்கள் இருந்து வருகின்றதாலே அவைகளை திருத்தி அமைக்கவேண்டும். இப்போது வருகின்ற சட்டசபை கூட்டத் திலே கூட, நடை முறையிலே இருந்து வரும் சிட்பண்டு சட்டத்தை திருத்தப் போவதாக குறிப்பிடப்பட்டு இருக்கிறது. ஆனால் அவைகளை காட்டிலும் மிக முக்கியமானது, இந்த பழைய வெள்ளைக்கார ரெவின்யூ ஆக்ட்டை திருத்த வேண்டியது மிக அத்தியாவசியமாகும்.

வீடுகள் கட்டிக்கொள்வதற்கும், மனைகள் கொடுப்பதற்கும் சௌகரியமாக செய்யக்கூடிய சட்டங்கள் பழைய ரெவின்யூ ஆக்ட் டிலே இல்லை. சாதாரணமாக ஒரு மனைக்கட்டை ஆர்ஜிதம் செய்யவேண்டி இருந்தால் ஒரு வருஷத்திற்கு மேல் ஆகிறது. 4 (1) கிளாஸ் போட்ட பிறகு ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தாசில்தார் ஆகியவர்களிடம் சென்று பார்த்து எழுதிக் கொடுத்து விட்டு வந்தால், உடனடியாக மனைக்கட்டுகள் கிடைப்பது இல்லை. எந்த மனைக்கட்டை கேட்கிறோமோ அதை நமக்கு கொடுப்பதற்குள் அந்த இடத்திலே வேறு யாராவது வாழை இன்னும் ஏதாவது தோட்ட வகைகள் பயிர்ச் செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். ஆகவே அப்படி நமக்கு மனைக்கட்டு கிடைக்கும்போது அதிலே வீடு கட்டி கொள்வதற்கு முடியாத ஒரு நிலைதான் ஏற்படுகிறது. பின்னர் அப்படியே விட்டு விடுவதால் பல இடங்களில் நிலங்கள் தரிசு ஆகவும், புறம்போக்காகவும் இருக்கிறது. இதை அரசாங் கத்தின் கணக்கில் எடுத்துப் பார்த்தால் தெரியும். ரெவின்யூ டிபார்ட்மெண்டாரால் நிலம் அளிக்கப்படும், ஏழைகள் வசிக்க இடம் கொடுக்கப்பட்டும் ஏன் அவர்கள் வீடு கட்டிக் கொள்ள வில்லை, என்றால் அதற்கு இதுதான் காரணம். ஆகவே இந்த ரீதியில் இல்லாமல் பழைய சட்ட திட்டங்களை மாற்றியமைத்து, ஜில்லா வெல்பர் ஆபீசருக்கும், கலெக்டருக்கும் போதுமான அதிகாரத்தை கொடுத்து இந்த நாட்டில் உள்ள பின் அடைந்த ஏழை மக்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன்.

அதேபோல சென்னை நகரை பொறுத்த வரையில் சிட்டி இம்ப்ரூவ்மெண்ட் டிரஸ்ட் நகரம் பூராவிலும் பல காலனிகள் கட்டி யிருந்தும் ஒரு ஹரிஜனங்களுக்காக வீடு கட்டிக் கொடுக்கவில்லை. அதற்கு யாராவது ஒருவர் மனு செய்து கொண்டு இருக்கிறார்களா என்று கேட்டால் பல பேர்கள் செய்து கொண்டு இருக்கிறார்கள்.

ஆனால் யாருக்கும் கிடைக்கவில்லை. இப்பேர்ப்பட்ட ஒரு நிலைமையை மாற்றியமைக்கவேண்டும். சி.ஐ.டி. யாரால் கட்டப் படும் ஒவ்வொரு காலனியிலும் இத்தனை சதவிதம் ஹரிஜனங் களுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்ற ஒரு நிபந்தனை இருக்க வேண்கும். அப்படி இல்லையென்றால் எந்த காலனியிலும் கலப்பு முறையில் வாழக்கூடிய, பிற்பட்ட மக்களை உயர்த்தக்கூடிய முறையில் காலனியை அமைக்க முடியாது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே ஒவ்வொரு காலனியிலும் எல்லோரும் சேர்ந்து வாழும் பழக்கத்தை உண்டாக்குவதற்கு ஒரு குறிப்பிட்ட சதவிதம் அவர்களுக்கு என்று ஒதுக்கவேண்டும். இப்படியெல்லாம் செய்தால்தான் நாளடைவில் தீண்டாமையை தீர்க்க முடியுமே யொழிய மற்றவற்றால் முடியாது.

எந்த துறை எடுத்துக் கொண்டாலும் தாழ்த்தப்பட்ட மக்கள் ஒதுக்கப்பட்டு இருப்பதை காணலாம். பஸ் பெர்மிட்டை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு தாழ்த்தப் பட்டவன் பஸ் பெர்மிட்டுக்கு மனு செய்தால், அது அவனுக்கு கிடைப்பது குதிரைக் கொம்பாக தான் இருக்கிறது. அப்படியே அவனுக்கு கிடைப்பதாக இருந்தா லும் மேலேயுள்ள பெரிய கம்பெனிக்காரர்கள் மேல் கோர்ட்டுக்கு போகிறார்கள். ஆகவே இதிலும் ஹரிஜனங்களுக்கு கட்டாயமாக இவ்வளவு சதவிதம் கொடுக்க வேண்டும் என்று குறிப்பிடும் ரீதி யிலே சட்ட திட்டங்களை திருத்துவது மிகவும் அத்தியாவசிய மாகும்.

கிணறு வெட்டுவது போன்ற சாதாரண விஷயங்களை எடுத்துக் கொண்டாலும் கூட அந்த நிலம் மடங்களுக்கோ, கோவில் களுக்கோ சொந்தமாக இருக்குமானால் ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டு அங்கே கிணறுகள் வெட்ட முடியவில்லை. கிணறு கள் வெட்டுவதற்கு புறம்போக்கு நிலம் இல்லை என்றால், அந்த நிலம் கோவில்களுக்கோ, மடாதிபதிகளுக்கோ அல்லது தனிப்பட் டவர்களுக்கோ சொந்தமாக இருந்தால், அவர்கள் அந்த இடத்தில் கிணறு வெட்ட இடம் கொடுக்க மறுத்தால், ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டார் நில ஆர்ஜிதம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதற்குள் 2, 3 வருஷங்கள் ஆகிவிடும். அதற்குள் கிணறு வெட்டுவதாக உத்தேசிக்கப்பட்டிருந்த அந்த இடம் நஞ்சையாகி விடும். இம்மாதிரியான நிலைமை வளர்ந்து கொண்டுதான் போகிறது. இம்மாதிரி நிலங்களை ஆர்ஜிதம் செய்ய வேண்டுமென்றால், அதற்கெல்லாம் துரிதமான நடவடிக்கை எடுக்க வேண்டும். சட்டத்தில் இருக்கக்கூடிய பிடிப்புகளை தளர்த்தி ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டு இது விஷயத்தில் உபயோக கரமான நடவடிக்கைகளை துரிதமாக எடுக்கும்படி செய்ய வேண்டும். நாடு எவ்வளவு முன்னேற்றம் அடைந்தாலும் சரி, நாட்டிலுள்ள வீடுகளெல்லாம் ஆலைகளானாலும் சரி, நாட்டிலுள்ள ஏழை எளியவர்களெல்லாம் குபேரர்களாக ஆனாலும் சரி, மன்னாதி மன்னர்களானாலும் சரி, பாரதியார் சொன்னதுபோல் எல்லோரும் இந்நாட்டு மன்னர்களாக ஆகிவிட்டாலும் சரி, இந்த நாடு மற்ற

23rd January 1961] [Sri K. B. S. Mani]

நாடுகளுக்கு கீழேதான், தலை பணியவேண்டிய நிலைமையில் தான் இருக்கும் தீண்டாமை ஒழிக்கப்படாவிட்டால். நாட்டிலுள்ள மக்கள் நாகரீகமாக வாழ்கிறார்கள், இந்த நாட்டிலுள்ள மக்களுக்கு ஹரிஜனங்களுக்கு எவ்வளவோ செய்ய வில்லையா, இப்படி குறை பாடுகள் இருக்கிறது என்று சொல்கிறார்களே என்று கேட்கலாம். இந்தச் சபையிலுள்ள 30, 35 ஹரிஜன எம்.எல்.ஏ.-க்களில் கண்ணோட்டத்தைக் கொண்டு பார்ப்பது மிகவும் தவறு. 1,000 இடங்களில் காண்பிக்கலாம். பஞ்சாயத்து போர்டுகள் அமைந்த இடங்களில் கூட பஞ்சாயத்து மெம்பர்கள் ஹரிஜனங்கள், பஞ்சாயத்துக் கோர்ட்டில் உட்காரக் கூடாது என்று சொன்ன இடங்களை மந்திரிகளுக்கு காண்பித்திருக்கிறோம். அவர்களும் பார்த்திருக்கிறார்கள். இம்மாதிரி கேவலமான நிலைமையை களைந்தெரிய வேண்டும். மற்ற எவ்வளவோ காரியங்களில் கவனம் செலுத்தினாலும், தீண்டாமை ஒழிப்பில் இன்னும் துரித மாக, வேகமாக கவனம் செலுத்தவேண்டியது மிகவும் அவசிய மாக இருக்கிறது.

அதோடுகூட, சர்க்கார் சில ஒழுங்கு முறைகளை கையாண்டால் தான், உண்மையாகவே இம்மாதிரியான நிலைமையை போக்க முடியும். அயல் நாடுகளில் அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்துவந்திருக்கிறார்கள். நம்முடைய எம்.எல்.ஏ-க்கள் சிலரும் அயல் நாடுகளுக்கு சென்று வந்திருக்கிறார்கள். அயல் நாடுகளில் எந்தக் காரியங்களை எடுத்துக்கொண்டாலும் ஒழுங்கு இருக்கிறது. எந்தத் துறை பணியாளர்களாக இருந்தாலும், ஒரு யுனிபாரம் இருக்கிறது. அந்த யுனிபாரம் முறையை நம்முடைய நாட்டில் அமுல் நடத்தினால் தான், ஒவ்வொரு துறை யிலும் ஒரு ஒழுங்கு முறை ஏற்படும். ஆசிரியர் களை எடுத்துக்கொண்டாலும் சரி, இன்னும் அமைச்சர்களை எடுத்துக்கொண்டாலும் சரி, அல்லது எம்.எல்.ஏ-க்கள், எம்.பி-க் கள் ஆகியோர்களை எடுத்துக்கொண்டாலும் சரி, ஒவ்வொரு துறை பணியாளர்களுக்கு ஒரு யுனிபாரம் ஏற்படுமேயானால், ஒவ்வொரு துறையிலும் ஒழுங்கு முறை ஏற்பட்டு அவர்களுடைய கடமைகளை நேர்மையாகவும், ஒழுங்காகவும் நிறைவேற்ற முடியும். அப்படி ஒரு ஒழுங்கு முறையை கையாளும்பொழுது நான் தாடி வைத்திருக்கிறேனே என்று ஒரு மெம்பர் கேட்கலாம். அப்படி ஒழுங்கு முறை ஏற்படும்பொழுது அவசியப்பட்டால் நான் தாடியைக் கூட எடுத்துவிடுவதற்கு தயாராக இருக்கிறேன் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த ஒழுங்கு முறையினால்தான் போலீஸ் இலாகாவில் கட்டுப்பாடு இருக்கிறது. மிலிடரியில் கட்டுப்பாடு இருக்கிறது. நேவியில் கட்டுப்பாடு இருக்கிறது. காரணம் அவர்களுக்கு ஒரு யூனிபாரம் இருக்கிறது. "Do or die" என்று சொல்வது போல, அவர்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்துதான் ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருக்கிறது. அதற்குக் காரணம் அவர்கள் யூனிபாரம்தான். அந்த **Uniform Method** -ஐ நம் நாட்டில் கொண்டுவருவது மிகவும் அவசியமாக இருப்பதோடு, அதுதான் சர்க்காரின் முதல் வேலையும், கடமையு மாக இருக்கவேண்டும். அப்படிச் செய்தால்தான் நம் குழந்தை

[Sri K. B. S. Mani] [23rd January 1961

களையாவது நல்ல ஒழுங்கு முறைக்குக் கொண்டு வர முடியும். உண்மையில் நாகரீகத்தின் பெயரால் பல சீர்கேடான காரியங்கள் இந்த நாட்டில் நடந்துவருகின்றன. நாகரீகத்தின் பெயரால் சீர்கேடான நிலைமை வளர்ந்துவிடாமல் தடுக்கவேண்டுமென்றால் 'யூனிபாரம் மெதர்டு' அவசியம் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். அப்பொழுதுதான் அடிப்படையை திருத்த முடியும். அடிப்படையில் நாகரீகத்தின் பெயரால் ஏற்பட்டுள்ள கேவலமான நிலைமையை திருத்த முடியும். தீண்டாமையை ஒழித்தால்தான், நாடு உண்மையிலேயே முன்னேற்றம் அடைந்ததாகக் கருதப்படும் என்று கூறி, எனக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு வணக்கம் கூறி, முடிக்கிறேன்.

* SRIMATHI KAMALAMBUJA AMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரையின் மீது சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் பெருமான் தன்னுடைய உரையிலே பெரு மழையின் காரணமாக சில இடங்கள் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டாலும் கூட, அந்த இடங்களுக்கெல்லாம் வேண்டிய நிவாரணங்கள் அவ்வப்பொழுது கொடுக்கப்பட்டு வருகின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார். அது பெரிய மகிழ்ச்சிக்குரிய விஷயம் ஆகும். ஒரு முறை கஷ்டப்பட்டு நல்ல விவசாயத்தை தொடங்கி, பயிர்களெல்லாம் நன்றாக வளர்ந்து வந்த பிறகு, பெருமழையின் காரணமாக சேதம் ஏற்பட்டதினால், மறுபடியும் அதற்கு வேண்டிய பொருளைப் போட்டு விவசாயத்தை தொடங்குவது என்றால் மிகவும் கஷ்டமாக இருக்கும் என்ற காரணத்தினால், அவர்களுக்கு விதைகளையும் கொடுத்து உரத்திற்கு வேண்டிய பணத்தையும் கொடுத்து, நல்ல வகையிலே விவசாய மக்களுக்கு வேண்டிய உதவியைச் செய்து மறுபடியும் உணவு உற்பத்தி பாதிக்காத வகையிலே, விளைச்சல் நல்ல முறையிலே ஏற்படக்கூடிய வகையில் நிவாரண உதவி அளிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. சில இடங்கள் மழையினால் பாதிக்கப்பட்டாலும் கூட, வறண்ட பிரதேசங்களில் இருந்த பயிர்களெல்லாம் மழையின் காரணமாக நன்றாக செழுமையாக வளர்ந்து, கடந்த ஆண்டை விட இந்த ஆண்டு நல்ல மகசூலைக் கொடுக்கக்கூடிய வகையில், நஷ்டத்தையும் ஈடுகட்டி அதற்கு மேலும் மகசூல் காணக்கூடிய முறையில் இந்த மழை நமக்கு உதவி இருக்கிறது என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆனாலும், நிவாரணம் அளிக்கும் விஷயத்தில் சற்று துரிதமாக நடவடிக்கை எடுக்கவேண்டும். குறிப்பாக பொன்னேரி தாலுகாவில் கீழ் பகுதியிலே ஆற்றங்கரை ஓரங்களில் உள்ள வயல்களெல்லாம், ஆற்றில் வெள்ளப் பெருக்கு எடுத்ததினால், உடைப்பு ஏற்பட்டு மணல் மேடு ஆகிவிட்டது. பயிர்களெல்லாம் இருந்த இடமே தெரியாமல் போய்விட்டது. பொது மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும் நானும் அந்தப் பகுதிகளுக்குச் சென்று பார்த்தோம். உண்மையிலே அந்த நிலைமையைப் பார்க்கும்பொழுது என்ன சொல்வது என்று தெரியாமல் பிரமிக்கக்கூடிய அளவுக்கு அந்த வயல்கள் 4, 5 அடி மண் மேடிட்டு உயர்ந்திருந்தன. அந்த வயல்களிலுள்ள மண்ணை

23rd January 1961] [Srimathi Kamalambuja Ammal]

தாங்களாகவே விவசாயிகள் அப்புறப்படுத்தவேண்டுமென்று சொன்னால், ஓரிரண்டு வருஷங்களில் ஆகக்கூடிய காரியம் இல்லை. அமைச்சர் அவர்கள் அந்த இடங்களுக்கு 'புல் டோசர்கள்' கொடுத்து உதவி செய்ய முடியுமானால் விவசாயிகளுக்கு கொடுத்து உதவி செய்யலாம் என்று யோசனை கூறினார்கள். உடனடியாக அந்த வேலையைச் செய்வதற்கு, அந்த மணலை அப்புறப்படுத்து வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அமைச்சர் அவர்கள் மிகவும் துரிதமாக எடுக்கவேண்டும். இல்லை என்று சொன்னால், நிவாரணம் கொடுத்தால் பயிர் செய்யக்கூடிய ஒரு சில இடங்களிலும், மணல் மேட்டுப் பகுதிகள் 2, 3 ஆண்டுகளுக்கு பயிர் செய்யப் படாமல் அப்படியே விடப்பட்டுவிடுமோ என்ற சந்தேகம் இருந்து வருகிறது. ஆகவே, இந்த மணல் மேடுகளை அப்புறப்படுத்து வதற்கு துரிதமான நடவடிக்கை உடனடியாக எடுக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கவர்னர் பெருமான் உரையிலே தூத்துக்குடி துறைமுக அபி விருத்தி வேலையை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மேற் கொண்டு நடத்தப்போகிறோம் என்று குறிப்பிட்டிருப்பது பெரிய மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். இந்தத் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ளப்படவில்லை என்று சொன்னால், வர இருக்கிற பொதுத் தேர்தலில் இதை ஒரு பிரச்சனையாக எடுத்துக் கொண்டு, மாநில அரசாங்கத்திற்கு ஒன்றும் யோக்கியதை இல்லை, இதைக் கூட மத்திய சர்க்காரிடம் கேட்டு வாங்கக்கூடிய நிலைமை இல்லை என்று சொல்லி இதை ஒரு பெரிய தேர்தல் பிரசாரமாக எடுத்துக்கொள்ளக்கூடிய நிலையில் எதிர்க்கட்சிகள் இல்லையே என்ற மனக்கவலை அவர்களுக்கு இருக்கும்பொழுது, காலாகாலத்தில் திட்டங்களை வகுத்து மக்கள் நல்ல சுபிட்சமான வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்பாடு செய் கிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சிக்காரர் களுக்கு அது ஒரு பெரும் மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய நிலை இருக்கிறது. நல்ல காரியங்கள் செய்யும்பொழுது ஒரு சாராருக்கு மகிழ்ச்சி, மற்றொரு சாராருக்கு மனக்கிலேசம் ஏற்படக்கூடிய நிலை இருக்கிறது என்று சொன்னால், சுயநலம் தான் அங்கு தாண்டவ மாடுகிறது, மக்களுடைய நலன் அல்ல என்று நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

தூத்துக்குடித் துறைமுகத் திட்டம் கவர்னர் பெருமான் உரையில் இடம் பெறவில்லை என்று சொன்னால், இந்நேரம் எத்தனையோ மேடைகளிலே, இத்திட்டத்தைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு யோக்கியதை இல்லை என்று சொல்லுவதற்கு பல சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருக்கும். ஆகவே இன்றைய தினம் வாய் அடங்கிப் போகும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இன்னும் பல துறைமுகங்கள் நம் நாட்டிலே சீர்படுத்த வேண்டிய நிலையிலே இருக்கின்றன. குறிப்பாக, பழவேற்காடை எடுத்துக்கொள்வோமேயானால், டச்சுக்காரர்கள் இருந்த காலத்தில் அது நல்ல வியாபார ஸ்தலமாக இருந்ததால் அங்கேயுள்ள மக்கள்

நல்ல முறையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டிருக் தார்கள். இப்பொழுது டச்சுக்காரர்கள் போய்விட்ட பிறகு, துறைமுகம் இல்லாத காரணத்தால், அங்கேயுள்ள மக்கள் வாழ வழியில்லாமல், வீடுகளையும், வீட்டின் உத்திரங்களையும் விற்று, பிழைப்புக்கு வழியில்லாத நிலையிலே இருந்துகொண்டிருக்கிறார்கள். அங்கே ஒரு படகு கட்டும் தொழிற்சாலையாவது அமைத்தால் நலமாக இருக்குமென்று நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். தூத்துக்குடித் துறைமுக விஷயத்திலே அரசினர் எவ்வளவு அக்கரை எடுத்துக்கொண்டார்களோ, அதே அக்கரையை பழவேற் காடு துறைமுக விஷயத்திலும் எடுத்துக்கொண்டு, அங்கே ஒரு படகு கட்டும் தொழிற்சாலையையாவது ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கும்மிடிபூண்டியில் ஏற்கெனவே ஒரு " அம்மியூனிஷன் டெப்போ " இருந்தது. அங்கே ஏராளமான மக்கள் வேலை செய்து வந்தார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் அதை எடுத்துவிட்டார்கள். அதன் காரணமாக இப்பொழுது பலர் வேலை இழந்து தவித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த டெப்போ இருந்த இடத்திலே ஒரு கனரக எலெக்ட்ரிக் தொழிற்சாலை ஏற்படுத்துவதாக ஒரு ஆலோசனை இருக்கிறது என்று பத்திரிகை களில் பார்த்து நாங்கள் மகிழ்ச்சி அடைந்தோம். அந்தப் பிரதேசம் ஒரு வரண்ட பிரதேசம், விவசாயம் செய்வதற்கு தண்ணீர் வசதியில்லாத பிரதேசம். ஆகவே, அங்கே ஒரு தொழிற் சாலையை ஏற்படுத்தப் போகிறார்கள் என்று சொன்னால், அந்தப் பிராந்திய மக்கள், ஒரு முடவனுக்குக் கொம்புத் தேன் கிடைத்தால் எவ்வளவு சந்தோஷம் அடைவானோ, அதுபோல் இருந்தார்கள். அங்குள்ள மக்கள் வளமாக வாழவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தபொழுது, அடுத்த நாளே அந்தத் தீர்மானம் கைவிடப்பட்டது என்ற செய்தி வெளிவந்தது. இன்றைக்கு நமது மாகாணத்திலே 26 தொழிற் பேட்டைகள் ஆரம்பிக்கப்படுமென்று சொல்லப்படுகிறது. ஆகவே ஒரு ஜில்லா வுக்கு இரண்டு தொழிற்பேட்டைகளாவது நிறுவப்படும். ஒரு பெரிய தொழிற்சாலையை அங்கே ஏற்படுத்துவதற்கு வாய்ப்பு இல்லாவிட்டாலும், ஒரு தொழில் பேட்டையையாவது அங்கே நிறுவவேண்டும். நமது தொழில் அமைச்சர் அவர்கள்கூட அந்த டெப்போ இருந்த இடத்தை பார்வையிட்டார்கள். எட்டு சதுர மைல் விஸ்தீரணம் இருக்கிறது. தொழில் பேட்டை ஆரம்பிப் பதற்கு இடம் வசதியாக இருக்கிறது. நமது நாட்டின் வட கோடியிலே இருக்கும் இந்த கிராமத்தைப் புறக்கணிக்காத வகை யிலே, இங்கே ஒரு தொழில் பேட்டை ஏற்படுத்துவதற்கு வசதி இருக்குமா என்பதை கவனித்து, அப்படி வசதியிருக்குமேயானால், கட்டாயமாக ஒரு தொழிற்பேட்டையை ஏற்படுத்தவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

பொதுவாக, இந்த மன்றத்திலே கவர்னர் பெருமான் உரையின் மீது பேசும்பொழுது, இந்த மாகாணத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைப்பதற்கு ஏன் தவறிவிட்டார்கள், தமிழ் நாடு என்று

23rd January 1961] [Srimathi Kamalambuja Ammal]

பெயர் வைப்போம் என்று ஏன் குறிப்பிடாமல் விட்டுவிட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. தமிழ் நாடு என்று பெயர் வைப்பதிலே தயக்கம் ஒன்றும் இல்லை. தமிழ் நாடு என்று பெயர் வைப்பதினாலே, இன்றுவரை சென்னை மாகாணம் கண்டிராத முன்னேற்றத்தை நாம் காணமுடியுமென்று எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் விளக்கிக் கூறுவார்களேயானால், இந்த நிமிஷத்திலே வைத்துக்கொள் வதற்குத் தயாராயிருக்கிறோம். தமிழ் நாடு என்று பெயர் வைத்த உடனேயே, தமிழ் நாட்டிலுள்ள பசிப்பிணி ஒழிந்துவிடும், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்துவிடும், மற்றும் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடும் என்று சொல்வார்களேயானால், ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறோம். அப்படிப் பெயர் வைப்பதன் மூலமாக எல்லாப் பிரச்னைகளும் ஒழிந்துவிடும், மக்கள் சுபிட்ச மாக வாழமுடியுமென்ற நம்பிக்கை இருக்கிறது என்று எல்லோருக் கும் தெளிவுபட விளக்குவார்களேயானால், அதை ஏற்றுக்கொள் வதில் ஆட்சேபம் இருக்காது. தமிழ் நாடு என்று பெயர் வைத்தாலும், யார் யார் எந்தத் தொழிலைச் செய்ய முன்வர வேண்டுமோ, அதைச் செய்ய வேண்டும். பெயரை மாத்திரம் மாற்றி வைத்துவிடுவதினாலே, எந்தவிதமான முன்னேற்றத்தை யும் கண்டு விட முடியாது. அப்படியென்றால், ஏன் இத்தனை கஷ்டங்கள், ஏன் பல திட்டங்களைப் போட்டு நாம் அதிக உற்பத்தி செய்ய வேண்டுமென்று சொல்கிறோம்? தமிழ் நாடு என்று பெயர் வைக்கும் ஒரு பிரச்னை தீர்ந்துவிட்டால், அத்துடன் மற்ற எல்லா பிரச்னைகளுமே தீர்ந்து விடுமேயானால், அதை ஏற்றுக்கொள்வதற்கு ஆட்சேபம் இருக்காது. சென்னை என்று சொன்னால், உலகத்திலே எல்லாக் கண்டங்களிலும் பிரபல்யமாக இருக்கிறது என்ற காரணத் திற்காக அந்தப் பெயரை வைத்துக்கொண்டிருக்கிறோம். பிரிந்து போனபிறகு, ஆந்திரம் என்று வைத்துக்கொண்டார்கள், கேரளம் என்று வைத்துக்கொண்டார்கள். சென்னை ராஜ்யம் எப்பொழுதும் போல் இருந்துகொண்டிருக்கிறது. சென்னைக்கு தமிழ் நாடு என்று பெயர் வைத்தால்தான் தமிழ் நாடு ஆகும், இல்லாவிட்டால் தெலுங்கு நாடு ஆகிவிடுமோ என்ற சந்தேகம் நமக்கு வேண்டியதில்லை. ஆகவே தமிழ் நாடு என்று பெயர் வையுங்கள் என்று சொன்னால் அதை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவில்லை என்று சொல்லி தேர்தலிலே போட்டியிடுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைக்குமென்ற காரணத்திற்காக, மதிப்பிற்குரிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இந்தப் பிரச்னையைக் கிளப்பிக் கொண்டிருக்கிறார்கள். மக்களும் இதை நன்றாக உணர்ந்திருக் கிறார்கள். சென்ற 10 அல்லது 12 ஆண்டுகளிலே நமது மக்கள் எல்லோரும் தெளிவு பெற்று, யார் சொல்லுவது நன்மை, யார் சொல்லுவது தீமை என்று என்று கண்டுபிடிக்கும் சக்திபெற்ற மக்களாக இருக்கிறார்கள். வேண்டுமானால், கூட்டங்களிலே கை தட்டுகிறார்களே என்று சொல்லலாம். யார் எதைச் சொன்னாலும் கைதட்ட வேண்டுமென்ற மனப்பான்மை இருக்கிறது என்ற காரணத்தினாலே கைத்தட்டுகிறார்களேயொழிய, ஏதோ நல்லதைச் சொல்லிவிட்டார்கள், அதற்காக கை தட்டுகிறார்கள் என்று

[Srimathi Kamalambuja Ammal] [23rd January 1961

நினைத்து ஏமாறக் கூடாது. இது போன்ற பிரச்னைகள் தேர்தல் சமயங்களிலே பிரசாரம் செய்வதற்குத்தான் உதவும். அந்த வகை யிலும் மக்கள் நன்ருக்— புரிந்துகொள்வார்கள்.

மற்றும் எல்லாத் துறைகளிலேயும் நாம் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறோம். இன்னும் அதிகப்படியான ரெயில்வே பாதைகள் நிறுவப்படுமென்றும் சொல்லியிருக்கிருர்கள். படுக்கை யிலே படுத்திருந்தவன் உடனே நின்று எழுந்துவிட முடியாது. அதைப்போல் ஒவ்வொரு திட்டமாக வகுத்து அதிலே முன்னேற்றம் காணவேண்டுமேயொழிய, எடுத்த எடுப்பிலே அடிக் கடக்காலிலிருந்து நேராக மேல் மாடிக்குப் போக முடியாது. படிப் படியாக ஏறித்தான் போகவேண்டும். கவர்னர் பெருமான் உரையிலே சொல்லப்பட்டிருக்கும் திட்டங்களை நிறைவேற்றும் காலத்திலே துரிதமான முறையிலே அவைகளை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI D. S. AUTHIMOOLAM**: சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரையிலே முக்கியமான விஷயங்கள் சொல்லப்படவில்லை. சென்ற வருஷம் கவர்னர் உரையில், குறைந்த வருமானக்காரர் களைப் பொறுத்தவரையில் விலைவாசிகள் பயங்கரமாக இருக் கின்றன என்றும், அரசாங்கம் கவலைப்படுவதாகவும், நேஷனல் டெவலப்மென்ட் கவுன்சிலுக்கு எழுதியிருக்கிறோம் என்றெல்லாம் விளக்கமாக இருந்தது. இந்த வருஷம் அதைப்பற்றி பேச்சு மூச்சே இல்லை. கவர்னர் பெருமான் பெயரில் இந்த அறிக்கை இருந்தாலும், அதைத் தயார் செய்வது நமது நிதி மந்திரி அவர் கள் என்றே நினைக்கிறேன். சாமர்த்தியமாக இந்த விஷயங்களை எல்லாம் நழுவ விட்டிருக்கிருர்கள்.

இந்த தேசத்தில் அரசாங்கம் யார் வேண்டுமானுலும் நடத்த லாம். ஆனால், திறமையாக நடத்த வேண்டும் என்பதுதான் முக்கியமானது. மக்கள் வாங்கும் சக்திக்கு உட்பட்டு, நாட்டில் சாமான்களின் விலைகள் இருக்க வேண்டும், அது ஆடம்பரப் பொருளானுலும் சரி, அல்லது சாதாரணப் பொருளானுலும் சரி. எல்லாம் ஒரே விலை யேற்றம். ஜீனி விலை ரூ. 1–10–0 ஒரு வீசைக்கு. ஜீனியைப் பற்றிச் சொன்னால், பாயாசம் சாப்பிடு கிறவர்களுக்கு அந்தக் கவலை, எங்களுக்குக் கவலையில்லை யென்பார்கள். நாங்கள் சோஷலிஸத்தில் மூழ்கி விட்டோம் என்று நீங்கள் எங்களுக்குப் பதில் சொல்லி விடுவீர்கள். அதை விட்டு விடு கிறேன். சாதாரண உப்பை எடுத்துக் கொள்வோம். படி 1¾ அணு என்று நினைக்கிறேன். சில தினங்களாக அதிக மழை காரணமாக, படிக்குக் காலணு அதிகரித்திருக்கலாம். ஆகவே, உப்பு, படி ஒரு பைசா விற்றது, இன்று 1½ அல்லது 1¾ அணு. அந்தக் காலம் போய் விட்டது. நீங்கள் என்னவோ பெரிய ஸைஸ் ஐந்தாண்டுத் திட்டங்கள், ஐந்தாண்டுத் திட்டங்கள் என்று சொல்லிக்கொண்டு, ஐந்து வருஷத்திற்கு ஒரேயடியாகப் பட் ஜட்டைப் போட்டுவிடுகிறீர்கள். அதையெல்லாம் பற்றி அதிக மாகப் பேச, நமக்கெல்லாம் அதிகமாகப் புரியாது. ஐந்தாண்டுத்

11-30 a.m.

23rd January 1961] [Sri D. S. Authimoolam]

திட்டங்கள் நம் நாட்டின் பொருளாதார சக்தியைப் பொருத்தோ, நமக்கிருக்கும் (Resource) ரிஸோர்ஸைப் பொருத்தோ இருக்க வில்லை. நீங்கள் பாட்டுக்கு 8,000 கோடி யென்றும், நம் திட்டம், இவ்வளவு கோடி, அவ்வளவு கோடி யென்று சொல்கிறீர்கள். இங்கே இருக்கும் நண்பர்களில், அநேகருக்கு அதைச் சரியாக எழுதிப் பார்க்கக் கூடத் தெரியாது, குறைந்தது 180 பேருக்கு அதை ஒழுங்காக எழுதக்கூட, முடியாது. அப்படிச் சொல்லி விட்டு, வருஷத்திற்கு இவ்வளவு பற்றுகுறை என்று சொல்லி, நோட்டுகளை 400, 500 கோடி யென்று அடிக்கிறீர்கள். இதனை லெல்லாம், இந்த நாட்டில் அதிகமாக ப்ளாக் மார்கெட்டு ஆக்கி விடுகிறீர்கள். இந்த நாட்டில் நீங்கள் வேறொன்றும் செய்ய வேண்டாம். பெரிய திட்டங்கள் என்று சொல்லி, அதைச் செய் கிறோம், இதைச் செய்கிறோம் என்று செய்ய வேண்டாம். திட்டம் போடாத காலத்தில் பி அண்டு ஸி மில் ஏற்பட வில்லையா ? அங்கே மதுரையில் ஹார்வி மில் ஏற்படவில்லையா ? பெரிய பெரிய தொழிற் சாலைகள் ஏற்பட வில்லையா? ஏதோ திட்டம் போட்டதினால் தான், அம்பத்தூரில் ஒரு ஸைகிள் பாக்டரி வந்தது. மௌண்ட் ரோடில் பல பாக்டரிகள் வந்தது என்று சொல்வதெல்லாம், ஒரு பிரசாரம். பெரிய பெரிய திட்டங்கள் போடுவதால் எங்கு பார்த் தாலும் ப்ளாக் மார்க்கெட் ஆக்கி விடுகிறார்கள். இப்பொழுது எடுத்துக் கொள்ளுவோம். புதிது புதிதாக பத்திரிகைகள் ஆரம் பிக்கிறார்கள்; உங்கள் கதர் ஜிப்பாவைப் போட்டுக் கொண்டு, டெல்லிக்குப் போய், பத்திரிகைக் கோட்டா வாங்குகிறார்கள். 200 ரீம் தேவையானால், 400 ரீமுக்கு கோட்டா வாங்குகிறார்கள்; இறக்குமதி செய்கிறார்கள்; ப்ளாக் மார்க்கெட்டில் விற்று பணம் சேர்க்கிறார்கள். கோல்ட் ப்ளேக் சிகரெட் 50 கொண்ட டின்னைக் கையில் வைத்துக்கொண்டு, ப்ளிமத் காரில் சவாரி செய்கிறார்கள். காம்பர், சூடத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு கேஸ் இறக்குமதி செய்து விற்றால், ரூ. 200-க்கு கிடைக்கும். லைசென்சை வாங்கி, இறக்குமதி செய்து ப்ளாக் மார்க்கெட்டில் ரூ. 2,400-க்கு விற்கிறார்கள். இந்த தேசம் பூராவும் ப்ளாக் மார்கெட். இந்த ஐந்தாண்டுத் திட்டங்கள் ஏழை எளிய மக்களையெல்லாம் நசுக்கிக்கொண்டிருக்கிறது. பெரிய திட்டம் போட்டிருக்கிறோம் என்கிறீர்கள். சிலர் 300 கோடி கிடைத்திருக்கிறது, ஒரிஜினலாக 400 கோடிக்கு மூன்றாவது திட்டத்தில் ப்ரபோசல்ஸ் போட்டோம் 290 கோடி தான் வாங்கி வந்திருக்கிறார்கள் என்கிறார்கள். பல கோடிகள் வாங்க வேண்டாம். நரிவலம் போனால் தேவலையா, இடம் போனால் தேவலையா என்று ஒரு கதை உண்டு. மேலே விழாமல் போனால் தேவலை என்ற முறையில், பெரிய திட்டங்களைப் போட்டு, நோட்டுகளை அடிக்காமல் இருந்தால் சரி. அப்படிச் செய்தால் **Low income, fixed income groups** களுக்கு கஷ்டம் கொடுக்க வேண்டாம், அவர்களை நசுக்க வேண்டாம், நாசம் பண்ண வேண்டாம். விறகு கிடைக்கவில்லை. எவ்வளவோ நிர்ப்பந்தங் கள் ஏழைகளுக்கு. இவைகளை தயவு செய்து சிந்தனை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

[Sri D. S. Authimoolam] [23rd January 1961

ஒரு சின்னத் தொழில் ஆரம்பிக்க வேண்டுமென்றாலும், எங்கு பார்த்தாலும் ஒரே ப்ளாக் மார்க்கெட் தான். சின்னத் தொழில் என்றாலும், மதராஸிற்கு வந்து, இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டில் ஒரு சர்ட்டிபிகேட் வாங்கவேண்டும். பிறகு லைசென்ஸ் வாங்க வேண்டும். பின்னால், அது, இது என்று எவ்வளவோ தொல்லை. பல நிர்ப்பந்தங்கள். பெரிய திட்டங்கள் என்று சொல்கிறார்களே தவிர, சாமான்கள் போக்குவரத்து சரியாக இல்லை. உரம் கிடைப்பதில்லை. எங்கே போய் விட்டது எல்லாம்? நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம். விவசாயம் ஒன்றுக்கு சரியாக உதவினாலும் போதும். விவசாயத்திற்கு முக்கியமானது நீர்ப்பாசனம், **fertilizer** பர்டிலைசர்கள், பர்டிலைசர்களை அன்னிய நாட்டிலிருந்து ஏன் வரவழைக்கக் கூடாது? செமண்ட் பாக்டரிக்கு லைசென்ஸ் என்றால் உங்கள் ஆளுக்குக் கொடுக்கிறீர்கள். தொழிலாளிகளுக்குப் பிழைப்புக் கொடுக்கிறோம் என்கிறீர்கள். விவசாயிகளின் ஒரிஜினல் தொழில், கிராமங்களில் விவசாயம். அப்படி அவர்கள் கிராமங்களில் நல்ல முறையில் விவசாயம் செய்ய வசதிகள் செய்துக் கொடுத்தால், இந்த வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்து போகும். நம் தேசம் விவசாயதேசம். ஆகவே, இங்கே விவசாயத்திற்கு டாப் ப்ராயாரிடி கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள். ரூ. 40 கோடி வரை புதுப் புது திட்டங்கள் போட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள்; பல கோடி ரூபாய்களை ஒதுக்கப் போகிறோம் என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால், கடைசியில் பார்த்தால், ரூ. 27 கோடிக்குக் குறைந்து விட்டது. பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு இப்படியென்றால், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு ரூ. 4 கோடி ஆ,க, 31 கோடி. இதில், தூத்துக்குடித் துறைமுகம் என்று சொல்லி, வோட்டு வாங்கும் நிலையில் செய்திருக்கிறார்கள். எதிர் கட்சிக் காரர்கள் பல ஆயிரம் வோட்டுக்களை வாங்கி விடுகிறார்கள், அதனால், குறைந்த 2,000 வோட்டு மார்ஜினில் வந்து விடுகிறது. ஆகவே, அதற்கு, அந்த துறைமுகத்திற்கு முதல் இடம் கொடுக்கிறோம் என்கிறார்கள் என்று நான் தைரியமாகச் சொல்ல முடியும். ஆகவே, இப்பொழுது விவசாயத்திற்கு உண்டான ரூபாயைக் குறைத்திருக்கிறார்கள். மொத்தம் 22 திட்டங்கள் போட்டிருக்கிறார்கள். மொத்தம் ரூ. 31 கோடி ஒதுக்கியிருக்கிறார்கள். நாற்பது கோடி என்பது 31 கோடியாகக் குறைந்திருக்கிறது. அதில் பரம்பிக்குளத்திற்கே, 22 கோடியைச் சாப்பிட்டாகி விடும். அது தான் நம் பைனான்ஸ் மினிஸ்டரின் ட்ரம்ப் கார்ட் (துருப்புச் சீட்டு). அந்தத் திட்டத்தை ஐந்து வருஷத்தில் நிச்சயமாக முடித்துவிடுவார். பின்னால் செண்டருக்கு போகவேண்டும் என்று ப்ளான் இருக்கும். ஆகவே, மற்ற திட்டங்கள் என்ன கதியாகும்? ஆகவே, இந்த நாட்டில் விவசாயம் ஒன்றை மாத்திரம் நல்ல படியாக அமல் நடத்துங்கள் என்று சொல்லுகிறேன். தொழில்கள் தானாக ஏற்படும். இதற்கு முன் ஏற்படவில்லையா என்ன. விவசாயிகள் தங்கள் மிச்சத்தை பாங்கிகளில் போடுவார்கள். பாங்கிகாரர்களும் மற்றவர்களுக்குக் கடன் வழங்கி, அவர்கள் தொழில்களை ஆரம்பிக்கலாம். பொருளாதாரம் இவைகளைப் பற்றி ரொம்ப

23rd January 1961] [Sri D. S. Authimoolam]

நேரம் பேச முடியாது, பேசவும் தெரியாது. அதோடு மணி யடித்து விடவும் கூடாது. ஆகவே, நீர்ப்பாசனத் திட்டங்கள் சம்பந்தப்பட்டவரை, ஓரிஜினல் தொகைக்கே அவற்றை நிறை வேற்றவேண்டும்.

மேலும், நிர்வாக விஷயங்களில் கஷ்டங்கள் ஏற்பட்டிருக் கின்றன. நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிடக் கூடாது. அந்த முறையில் இல்லாத நிலையில், திருநெல்வேலி ஜில்லா கலெக்டரை மாற்றியிருக்கிறீர்கள். அவர் அங்கே வந்து ஒன்றரை வருடத்திற்குள் அவரை நீங்கள் ஏதோ அவர் பேரில் காங்கிரஸ் கமிட்டிக்காரர்கள் புகார் சொன்னார்கள் என்று, உடனே அவரை மாற்றியிருக்கிறீர்கள். எதற்காக மாற்றி யிருக்கிறீர்கள் என்று எங்களுக்குத் தெரியும். இப்பொழுது எலெக்ஷன் Fever வந்தாச்சு. ஆகவே, என்ன செய்கிறீர்கள் செய்கிறீர்கள் என்றால், "ஜாக்கிரதை, மாகாணத்திலுள்ள உத்யோகஸ்தர்கள் எங்கள் கட்சிக்கு வளைந்து, நுழைந்து போக வேண்டும்; பக்கத்தில் ஒருவரை, ஒரு ஜில்லா கலெக்டரை மாற்றி விட்டோம்" என்று மாகாணத்திலுள்ள அதிகாரிகளுக்கு ஒரு எச்சரிக்கை நோட்டீஸ் விட்டிருக்கிறீர்கள். நீதி, நிர்வாகத்தில் இம்மாதிரி தலையிடாதீர்கள். காங்கிரஸ் கமிட்டிகளும், காங்கிரஸ் விவசாய சங்கங்களும் ஒவ்வொரு ஊரிலும் இருக்கிறது; கம்யூனிஸ்ட் சங்கங்களும் இருக்கின்றன. இந்த காங்கிரஸ் சங்கங் களை வைத்துக் கொண்டே ஆங்காங்குள்ள விவசாயிகளை நடத்து கிறீர்கள். 60 : 40 சட்டத்தை மீறி விவசாயிகள் நடக்க இந்த சங்கங்கள் உதவி. ஆனால், காங்கிரஸ் விவசாய சங்கம் என்பது ரொம்ப அநீதியாகப் போய்க்கொண்டிருக்கிறது. ஏனென்று கேட்டால், அங்கே அவர்கள் நிலச் சுவாந்தார்கள் விஷயமாக, அதிலும் சிறு நிலச் சுவாந்தார்கள் விஷயமாக, சட்டத்திற்கு உட்பட்டு நியாயமான விகிதாசாரத்தில் தானியங்களைக் கொடுக்க மாட்டேன் என்று சொல்கிறார்கள். அதுபற்றி சம்பந்தப்பட்ட இலாகாவுக்கும், போலீஸ் இலாகாவுக்கும் மனுச் செய்துகொண் டாலும் பரிகாரம் கிடைப்பதில்லை. அக்கிரமங்களைப் போலீசாரி டம் தெரிவித்தாலும், மனுக்கொடுத்தாலும், காங்கிரஸ் விவசாயச் சங்கம் சார்பாக அங்கங்கே உள்ள காங்கிரஸ் கமிட்டி ஆட்கள் தலையிடுவதால் போலீஸ் இலாகாவின் நிர்வாகம் ஸ்தம்பித்துப் போய் நிற்கிறது. மாகாணம் பூராவும் இதே நிலைதான். வேண்டு மானால் நீங்கள் ரிக்கார்டுகளைக் கொஞ்சம் பரிசீலனை செய்யுங்கள். தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொள்ளுங்கள். திருநெல்வேலி ஜில்லாவை எடுத்துக் கொள்ளுங்கள் அங்கே உங்கள் போலீஸ் டிபார்ட்மெண்ட் எப்படி நிர்வாகம் செய்கிறது என்று பாருங்கள். காங்கிரஸ் விவசாயச் சங்கம் என்று சொன்னால் எப்படி இருக்கிறது என்பதற்கு நான் ஒரு சிறு உதாரணம் சொல்கிறேன். கேளுங்கள்.

மேலப்பாளையத்தில் ஒரு முஸ்லீம் பெரியார் இருந்தார். அவருக்கு ஒரு எஸ்டேட் இருக்கிறது. திருநெல்வேலி தாலூகா வில் வேளாளர்குளம் எஸ்டேட் என்று சொல்லப்படுகிற எஸ்டேட் அது. அந்த எஸ்டேட்டின் மதிப்பு மூன்றரை லட்ச ரூபாய்

[Sri D. S. Authimoolam] [23rd January 1961

ஆகும். அந்த எஸ்டேட்டிலே 70 விவசாயிகள் இருக்கிறார்கள். நாற்பது, ஐம்பது பேர்கள் ஹரிஜனங்கள்; 20 பேர்கள் எங்கள் சமூகத்தைச் சேர்ந்தவர்கள்; நாடார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த 70 பேர்களும் சரியானபடி, ஒழுங்காக 20 ஏக்கராக்கள் கூட நல்ல உரம், நல்ல விதை, நல்ல உழவு வைத்து விவசாயம் செய்ய முடியாத வகையில் 60 கோட்டை விதைப் பாடுள்ள நஞ்சையைப் பூராவும் ஆக்கிரமித்துக்கொண்டு இருக்கிறார்கள், காங்கிரஸ் விவசாயச் சங்கம் என்ற பெயரால். அவர்கள் மரங்களை வெட்ட விடுவதில்லை. வெட்டிவிட்டாலுங்கூட, அதை யாருக்கும் விற்க விடுவதில்லை. இப்படி ஏகப்பட்ட இடைஞ்சலை அந்தப் பெரியாருக்குக் கொடுக்கிறார்கள். அந்தப் பெரியாருடைய வயது 78. அவர் மூன்று வருஷ காலமாக அந்தக் கிராமத்திற்கு போகமுடியவில்லை. அவர் ஒரு நாள் தன்னுடைய வேலை ஆளைக் கூப்பிட்டு வண்டி பூட்டச் சொன்னாராம். 'வண்டி எங்கள் கிராமத்திற்கு வரக்கூடாது' என்று மறித்தார்களாம் காங்கிரஸ் விவசாய சங்கத்தவர்கள். உடனே போலீசில் மனுக் கொடுத்தாராம். இரண்டு வருஷங்களாக விசாரணை இல்லை. அந்தக் கிராமத்திற்கு அவர் போக முடியவில்லை. காங்கிரஸ் விவசாயச் சங்கம் என்ற பெயரில் அங்கங்கே சங்கங்களை வைத்துக்கொண்டு இப்படிச் செய்கிறீர்கள். உங்கள் போலீஸ் இலாகாவில் உள்ளவர்களுக்கு 'ஸீக்ரட் ஸர்க்குலர்' அனுப்பியிருக்கிறீர்களோ என்று நான் சந்தேகப்படுகிறேன். டெபுடி சூபரின்டென்டென்டானாலும் சரி, சூபரின்டென்டென்டானாலும் சரி, அவர்களிடம் போய் 'கம்ப்ளெயிண்ட்' செய்தால், அவர்கள் ஒன்றுமே நடவடிக்கை எடுப்பதில்லை. இரண்டு வருஷங்களாக மூன்று லட்சம் மதிப்புள்ள சொத்தை உடைய மனிதன் பட்டினிப் பசியாய் கிடந்து இறந்தார். அவர் பணக்காரர்; விட்டுத் தள்ளுங்கள். நடுத்தர விவசாயிகளுடைய நிலைமை என்ன? நீங்கள் இந்த நாட்டில் வோட்டுப் பிடிக்கும் மோகத்தில் சட்டத்தைப் பூராவும் சீர்குலைத்து என்ன என்னவோ செய்கிறீர்கள். நீங்கள் இம்மாதிரி செய்தால் இந்த நாடு நாளாவட்டத்தில் என்ன ஆகும்? நீங்கள் ஒரே காயத்தை மனதில் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஹரிஜனங்களுடைய வோட்டை நூற்றுக்கு நூறு பிடித்துவிடுவோம். ஆகவே எந்த கலெக்டரையும் மாற்றலாம், எதையும் செய்யலாம் என்பதாக நினைத்து கொண்டிருக்கிறீர்கள். வோட்டுப் பிடிக்கும் நோக்கத்தோடு இந்த தேசத்தை நடத்தாதீர்கள். கிரிமினிலாக இருந்தவர்களுக்குச் சலுகை காட்டுகிறீர்கள். இரண்டு வாரங்களுக்கு முன்னால்கூட, போலீஸ் இலாகா மந்திரி அவர்கள், ஒரு கொலைக் கேசிலே சம்பந்தப்பட்டு விடுதலை ஆனவரோடு பட்டணப் பிரவேசம் வந்திருக்கிறார் என்றால், சட்டத்திற்கு என்ன மதிப்பு இருக்கும்? கொலைக் கேஸிலே ஈடுபட்டு, பிறகு விடுபடுகிறார்கள் என்றாலும், விடுபட்டவுடனே காங்கிரசிலே நாலணா மெம்பராக ஆக்கிக் கொள்கிறீர்கள். அவரோடு போலீஸ் மந்திரி ஊர்வலம் வருகிறார். முந்தாநாள் கொலையாளியாக இருந்து, சட்டத்திலுள்ள டெக்னிகல் பாயிண்ட் அனுகூலமாக இருந்து வெளியே வருகிறார் என்றால், அவரையும் சேர்த்துக்

23rd January 1961] [Sri D. S. Authimoolam]

கொள்கிறீர்கள். இப்படிச் செய்வதற்குக் காரணம் வோட்டுப் பிடிக்கவேண்டும் என்ற ஒரே நோக்கமாகத்தான் இருக்க முடியும். நீங்கள் சட்டத்திற்கு மரியாதையற்ற நிலைமையிலே வோட்டுப் பிடிக்கும் நோக்கத்தை வைத்திருப்பதால் தான் சட்டத்திற்கு மதிப்பு கிடைக்காமல் இருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : 'அக்விட்' ஆன வரையே குற்றவாளி என்று சொல்லி அவரே சட்டத்திற்கு மதிப்புக் கொடுக்காமலிருக்கிறுர்.

SRI D. S. AUTHIMOOLAM : 'ஆனரபிள் அக்விட்டல்' என்று ஜட்ஜ்மென்டில்லே எழுதினுலும், கொலை செய்தவனுக்கு, தப்பு செய்தவனுக்கு, போலீஸ் ரிகார்டுபடி எக்ஸ்-கான்விக்டுக்கு மரியாதை செய்தால், நாட்டில் எது வேண்டுமானுலும் செய்யலாம் என்று ஏற்பட்டுவிடாதா? வோட்டுக்காக எது வேண்டுமானுலும் செய்துவிடுவதா? இம்மாதிரி செய்தா இந்நாட்டுக்குச் சுய ராஜ்யம் வந்தது? இல்லை. சுயராஜ்யம் எப்படி வந்தது? நியாயம் என்ற ஒரு அடிப்படையில்தான் சுயராஜ்யம் வந்தது. மகாத்மா காந்தியினுடைய நீதியான தன்மையின் காரணமாகத்தான் சுயராஜ்யம் கிடைத்தது. ஆகஸ்ட் தியாகிகள் ஜெயிலுக்குப் போனதால் சுயராஜ்யம் வந்து விடவில்லை. நீதிதான் என்றும் இந்த தேசத்தைக் காப்பாற்ற வேண்டும். அதுதான் ஜனங்களைக் காப்பாற்றும். நீதி தவறி நீங்கள் நடக்க ஆரம்பித்துவிட்டீர்கள். ஏதேதோ காரணத்திற் காக திருநெல்வேலி ஜில்லா கலெக்டரை மாற்றினீர்கள். எலெக் ஷனுக்கு முன்னுல் இப்படிப்பட்ட காரியங்களிலெல்லாம் இறங்கா தீர்கள் என்று உங்களை மன்றுடிக் கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்கின்றேன். வணக்கம்.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : On a point of order Sir. கனம் அங்கத்தினர் அவர்கள் பேசும்போது, அதிகாரிகளுக் கெல்லாம் அரசினர் எச்சரிக்கை விடுத்திருக்கிறுர்கள் என்று சொன்னுர்களே, அதன் பிரதியைச் சபை முன்னுல் வைக்க முடியுமா என்று கேட்கின்றேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஊகித்தார். அவ்வளவு தான்.

* SRI S. SAMIKANNU PADAYACHI : சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரையை நான் ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். சமீபத்தில் பெய்த மழையினுல் பாதிக்கப்பட்ட சில ஜில்லாக்களுக்கு அமைச் சர்கள் நேரில் சென்று பார்த்து, பாதிக்கப்பட்டவர்களுக்கு அனு தாபத்தை தெரிவித்து, அவர்களுக்கு வேண்டிய நிவாரண உதவி களையும் செய்ததைப்பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். மக்களுக்கும் அது ஒரு திருப்தியாக இருக்கக்கூடிய காரியம் என்பதைக்கருதி அதை நான் ஆதரிக்கிறேன்.

[Sri S. Samikannu Padayachi] [23rd January 1961

கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரையை நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் தான் பூர்த்தி செய்திருப்பார் என்று நான் எண்ணுகிறேன். அதில் முக்கியமானது தூத்துக்குடித் துறைமுகத் திட்டம். அடுத்தபடியாக, இரண்டொரு ரயில் பாதைகள். இவைகளை மூன்றாவது திட்டத்தில் முடித்துவிடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படுகிறது.

**(Deputy Speaker in the Chair.)**

இப்பெரிய திட்டங்களை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்திற்கு மிகவும் வற்புறுத்த ஞாபகமூட்ட விரும்புகின்றேன்.

பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் ஒருபுறமிருக்க, சிறிய பாசனத் திட்டங்களுக்காக ஒதுக்கியிருக்கும் தொகை மிகக்குறைவானது. அந்தத் தொகையை இன்னும் உயர்த்தவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவுக்கும் சிறிய பாசனத் திட்டங்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்துகொடுத்து, விவசாயிகளுக்கு வேண்டிய விதை, உரம் முதலியன கொடுத்தால் அதிகப் படியாக எதிர்பார்க்கும் 15½ லட்சம் டன் உணவுத் தானியங்களை உற்பத்தி செய்வதற்கு அனுகூலமாக இருக்கும்.

பெரிய நீர்ப்பாசனத் திட்டத்தில் முக்கியமானது கிருஷ்ணா-கோதாவரி நதி திட்டம். அதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொண்டால், சென்னை நகரத்தின் மக்கள் குடிஜலத்திற்கும், செங்கற்பட்டு, தென்னாற்காடு, வட ஆற்காடு ஜில்லாக்களின் பாசன வசதிக்கும் மிக உபயோகமாக இருக்கும். இந்த மூன்று ஜில்லாக்களினுடைய பாசனம் மிகவும் முக்கியமானது. பெரும்பாலும் புஞ்சை நிலமாகவே இருப்பதால், அவைகள் நஞ்சை சாகுபடி செய்ய இத் திட்டங்கள் உதவும். அதனால் உணவுப் பற்றுக்குறை நீங்கும். இந்த திட்டத்தை மூன்றாவது திட்டத்தில் எடுத்து நிறைவேற்றவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கின்றேன்.

மின்சார விஸ்தரிப்பைப்பற்றி உரையில் சொல்லியிருப்பது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். மூன்றாவது திட்டத்திற்குள் மின்சாரம் இல்லாத கிராமங்களே இருக்காது என்று சொல்வது பாராட்டத்தகுந்தது. அதற்காக அரசாங்கத்தைப் பாராட்டுகின்றேன்.

சாலைகள் நல்லமுறையில் பராமரிக்கப்படவேண்டுமென்றால் நான்கைந்து மைல் நீளமுள்ள சாலைகளை பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைத்துவிடலாம். அவ்வளவுதான் அவர்கள் பார்க்க முடியும். அதைத்தவிர ஜில்லா போர்டு ரோடுகளோ, சர்க்கார் ரோடுகளோ எல்லாவற்றையும் அரசாங்கமே தங்கள் மேற்பார்வையில் வைத்துக்கொண்டு நடத்தி வந்தால்தான் பொது ஜனங்களுக்கு எவ்வித கஷ்டமும் இன்றி சௌகர்யமாக இருக்கும்.

23rd January 1961] [Sri S. Samikannu Padayachi]

வட்டார அபிவிருத்தி பற்றி எடுத்துக்கொண்டால் பஞ்சாயத்து யூனியன்கள் எவ்வாறு செயல்படுகிறது என்று பார்க்க வேண்டும். இப்போது பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கும், கமிஷனருக்கும் நெருங்கிய தொடர்பும், ஒத்துழைப்பும் இல்லாமல் இருக்கிறது. இதுபற்றி அரசாங்கத்தின் கவனத்திற்கும் வந்திருக்கும். நான் பார்த்த பத்துப் பன்னிரண்டு இடங்களில் திருப்திகரமாக நடக்க வில்லை. ஒருவருக்கு ஒருவர் போட்டி. அவர்களுக்குள் ஒத்துழைப்பு இல்லாத காரணத்தினால் வேலை தடைபடுகிறது. ஆகவே சேர்மெனும், கமிஷனரும் ஒற்றுமையாக இருக்கவேண்டும் என்ற உத்தரவு போடவேண்டும். அல்லது சில அதிகாரங்களை சேர்மெனுக்குக் கொடுக்க அரசாங்கம் முன்வரவேண்டும். ஒரு ஊரில் இருக்கும் ஆசிரியரை அதே கிராமத்தில் இருக்கும் சேர் மெனுக்குத் தெரியாமல் திடீரென்று கமிஷனர் மாற்றுகிறார் என்றால் எப்படி அவர்களுக்குள் ஒற்றுமை இருக்க முடியும். ஆகவே அரசாங்கம் இதைக் கவனித்து அவர்களுக்குள் ஒற்றுமை உண்டாகக் கூடிய வகையில் தக்க ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அரசாங்கம் இப்போது விவசாயிகளுக்குச் செய்து வரும் பல நன்மைகளைப் பாராட்டுகிறேன். காலாகாலத்தில் கூடுமான வரை யில் அவர்களுக்கு விதை, உரம் முதலியன கிடைக்கும்படி செய்ய வேண்டும். இப்போது விவசாயிகளிடத்திலேயே ஒரு ஆர்வம் உண்டாகியிருக்கிறது. அரசாங்க உதவி கிடைக்கிறதோ இல்லையோ, நாற்பது கலம் விளைந்த பூமியில் 60 கலம் விளைவிக்க வேண்டும் என்று பாடுபடுகிறார்கள். விவசாயப்பொருள்களுக்கு நல்ல விலை கிடைக்கிறது என்கிற ஆர்வம்தான். ஆகவே நாம் அவர்களுக்கு காலாகாலத்தில் விதை, உரம் முதலியன கிடைக்கும் படி செய்தாலேயே நாட்டில் பற்றாக்குறை இல்லாதவாறு செய்து விடலாம். சிறு நீர்ப்பாசனத் திட்டங்களிலும் கவனம் செலுத்தி, ஆங்காங்குள்ள வாய்க்கால், ஏரி, குளம் எல்லாவற்றையும் மரா மத்து செய்து கொடுத்தால் பற்றாக்குறையே இல்லாதபடி செய்து விடலாம் என்று அரசாங்கத்திற்கு ஞாபகப்படுத்துகிறேன்.

நெய்வேலி சுரங்கத்தில் இருந்து கிடைக்கும் நிலக்கரியை எடுத்துக் கொண்டு போய் சேலத்தில் ஒரு இரும்புத் தொழிற் சாலையை வைக்கலாம் என்று அரசாங்கம் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறது. இங்கிருந்து கரியை அங்கே கொண்டுபோய், அங்கு தொழிற்சாலை ஆரம்பிப்பதைவிட அங்கு கிடைக்கும் இரும்பு கனியை இங்கு கொண்டு வந்து இங்கேயே ஒரு தொழிற் சாலையை அமைக்க வசதி இருக்கிறது என்று மத்திய அரசாங்கத் திற்கு நம் சர்க்கார் யோசனை கூறவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

கடந்த பல வருடங்களாகவே குடிதண்ணீர் கஷ்டத்தைப் போக்குவதற்கு நம் சர்க்கார் ஆங்காங்கே பல திட்டங்களை வகுத்து வருகிறார்கள். திருச்சி ஜில்லா உடையார்பாளையம் தாலுக்கா மிகவும் வறண்ட பிரதேசம். அங்கே குடிதண்ணீர்

மிகவும் கஷ்டம். நானே ஒரு சமயம் பார்த்தேன். மாடு குளுப்பாட்டமுடியாத கலங்கிய நீரை ஒருவர் மொண்டு சென்ற போது "எதற்காக?" என்றேன். இதைக் கொண்டுபோய் தேத்தாங் கொட்டை போட்டு தெளியவைத்து குடிப்பதற்காகத்தான்" என்ருர். குடிதண்ணீருக்கு அத்தனை கஷ்டமாக அந்தப் பகுதிகளில் இருந்து வருகிறது. நமது அரசாங்கம் பதவியேற்று கிட்டத்தட்ட பத்து வருஷங்களுக்கு மேலாகிறது. அந்தப் பிரதேச மக்களுடைய குடிதண்ணீர் கஷ்டத்தைப் போக்குவதற்கு முயற்சி செய்யக்கூடாதா? எத்தனையோ மகத்தான காரியங்களைச் செய்திருக்கிருேம். கொள்ளிடத்தில் இருந்து குழாய் மூலமாக இங்கே குடி தண்ணீர் சப்ளை செய்து, இங்குள்ள மக்கள் நோய் நொடி இல்லாமல் வாழ்வதற்கு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது உதவி செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

சிதம்பரம் தாலுக்காவில் 5½ பிர்க்காதான் டெல்டா பாசனம் உடையது. பாக்கியுள்ள 3 பிர்க்கா மானுவாரிதான். அங்கே பாசன வசதி கிடையாது. ஏற்கனவே அங்கே குழாய்க் கிணறுகள் வைக்க நம் சர்க்கார் அனுமதி அளித்ததன் காரணமாக குழாய்க் கிணறுகள் வைக்கப்பட்ட இடங்களில் நல்ல விவசாயம் செய்யப்படுகிறது. ஆகவே எங்கெங்கே தண்ணீர் கிடைக்கும் என்று கருதுகிருர்களோ அந்த இடங்களில் மட்டுமாவது இன்னும் ஒரு 100 குழாய்க் கிணறுகள் வைக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

கெடிலம், வெள்ளாறு, மணிமுத்தாறு இவைகளில் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் மழை வைகாசி, ஆனி மாத முதல் தை மாதம் வரை காலத்தில் மழையினுல் ஜலம் சரிவர கிடைத்து, விவசாயமும் நல்லமுறையில் செய்யப் பட்டு, நல்ல சாகுபடியும் கிடைத்து வந்தன. ஆனுல் இப்பொழுது அந்த ஆற்றில் ஒன்றில் கூட இருபது ஆண்டுகளாக காலத்தில் தண்ணீரே வருவதில்லை. வெள்ளாரில் தொழுவூர் அணைக்கு மேல் கொரைக்காவடி எல்லையில் ஒரு நீர்த்தேக்கம் கட்டவேண்டுமென்று கேட்டுக் கொண்டு அரசாங்கம் பரிசிலனை செய்து வருகிறது. அதை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து நிறைவேற்றினுல் தென் ஆற்காடு ஜில்லாவில், சிதம்பரம், விருத்தாசலம் போன்ற தாலுக்காக்களில் 50,000, 60,000 ஏக்கர்களுக்கு பாசன வசதி கிடைக்கும். சின்னுறு ஜலம் வந்து கொண்டு இருந்தது. அதை மறித்துக்கொண்டதால் அதனுல் சில சௌகரியங்கள் எங்களுக்கு கிடைத்தது. பின்னர் அங்குள்ள மக்கள் கேட்டு, அமைச்சர் அவர்கள் கூட வந்து பார்த்து அங்கு ஒரு நீர்தேக்கம் போட்டு ஜலத்தை மறித்துவிட்டதால் அந்தத் தண்ணீர் எங்களுக்கு கிடைக்காமல் போய் விட்டது. நாங்களும் ஆர்டீசியன் வெல்ஸ் வைத்து உபயோகித்துக் கொண்டிருக்கிருேம். அமைச்சர் அவர்கள் நான் மேற்குறிப்பிட்ட திட்டத்தை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து நல்ல முறையில் மக்களுக்கு உதவி செய்யவேண்டியது அவர்கள் பொறுப்பு என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

23rd January 1961]

**DEPUTY SPEAKER:** டைமாகி விட்டது.

**SRI S. SAMIKANNU PADAYACHI:** மணியடித்து விட்டார்கள், என் வாக்கை முடித்துக் கொள்கிறேன்.

*** SRI G. NARAYANASWAMI NAIDU:** மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கவர்னர்பிரான் அவர்கள் உரை பிரேரணை செய்யப்பட்டு, அதை ஆமோதிக்கும் முகத்தான் நான் ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். ராணி அவர்களை வரவேற்பது, நெய்வேலித் திட்டம், தூத்துக்குடி துறைமுகத்திட்டம் இவைகள் செயல்பற்றி கவர்னர் உரையில் பாராட்டியிருக்கிறார்கள். இதில் பல நண்பர்கள் பேசியாகி விட்டது. ஒரு சிலருக்கு இந்தத் திட்டங்கள் பிடிக்கவில்லை என்று நினைக்கிறேன். இவைகள் என்ன திட்டங்கள், இந்த சர்க்கார் வருவதற்கு முன்பே இந்த ஊரிலே திட்டமொன்றுமில்லாமல் பக்கிங்காம் கர்னுடிக் மில் வரவில்லையா, காங்கிரஸ் ஆட்சி வந்ததினால்தான் இவையெல்லாம் வந்திருக்கிறதா, விவசாயிகளுக்கு இந்த காங்கிரஸ் மிகுந்த தொந்தரவு கொடுத்து விட்டது என்று ஒரு சில நபர்கள் கோபப்படலாம். இன்னும் கொஞ்சம் முன்கூட்டியே போவது கொஞ்சம் கூட நன்றாயிருக்கும். ஐயாயிரம், ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் சர்க்கார் என்று ஒன்றுமில்லை, யாரும் யாரையும் சுரண்டவில்லை. அந்தக் காலத்தில் மனிதனுக்கு ஒரு தேவையும் கிடையாது, அப்பொழுது வாழ்க்கைப் பிரச்னை என்பதோ அல்லது விலைவாசி கூடுதல், குறைவு என்ற பிரச்னையோ இருந்ததில்லை. ஆகவே பழைய காலம் போல், நண்பர்கள் காட்டைப் பார்க்கப் போனால் நல்லமுறையில் யாருடைய தொந்தரவும் இல்லாமல் வாழ்க்கை நடத்த ஏதுவாகயிருக்கும். அந்தகாலத்திற்குதான் போகவேண்டுமென்ற விருப்பத்தோடு நண்பர்கள் பேசியிருக்கிறார்களோ என்று எனக்கு ஒரு ஐயப்பாடு. சில பேர்களுக்கு உலகம் வெறுத்துப் போய்விடுகிறது. சில காரியங்களை, சில அபிலாஷைகளை மனதில் வைத்துக் கொண்டுதான் மேலும் மேலும் பணக்காரனாக வேண்டும், பலரைச் சுரண்ட வேண்டும், அதற்கு அதிகாரிகள் தயவு வேண்டுமென்று விரும்பலாம். ஆனால் காங்கிரஸ், அதிகாரிகள் தயவைக் கொண்டு வளர்ந்ததல்ல. அதிகாரிகளுக்கு எதிராக, பிரிட்டிஷ்காரனிடம் ஆட்சியிருந்த போது அதை மோதி முறியடித்து இந்த நாட்டிற்கு சுதந்திரம் பெற்றோம் என்றால் மாற்றுக் கட்சி நண்பர்கள் இதை ஏற்று கொஞ்சம் புத்தியை கடுமையாக உபயோகப்படுத்த வேண்டும். "அனார்கிஸ்ட் மூவ்மென்ட்"-க்கு போக விருப்பம் இருந்தால் இந்த நாட்டில் ஏராளமாக காடுகள் இருக்கின்றன. பீடி வியாபாரி "கோல்ட் ப்ளேக்" உபயோகிப்பவனை எதிர்த்து, நம் பீடியை வாங்காமல் கோல்ட் ப்ளேக் குடிக்கிறானே, ஒரு கை பார்த்து விடலாம் என்று அதற்காக சட்டசபையை உபயோகப்படுத்துவது சரியல்ல. பீடியை கூடுதலாக, அதிகமாக உபயோகியுங்கள் என்று விளம்பரம் செய்வதில் ஆட்சேபணையில்லை. ஆனால் கோல்ட் ப்ளேக் சிகரெட்டை உபயோகிப்பவர்களை எதிர்பதற்கு சட்டசபையை உபயோகிப்பது அவ்வளவு கண்யமாக இராது. வீட்டில்

12 noon.

[Sri G. Narayanaswami Naidu] [23rd January 1961

கோபம் இருந்தால் அதை வெளியில் வந்து காண்பிப்பதுபோல், லட்சக்கணக்கில் பணம் செலவு செய்துவரவேண்டியதாகயிருக்கிறது என்று ஒரு சிலர் அங்கலாய்த்துக் கொண்டார்கள். லட்சம் என்ன கோடிக்கணக்கில் செலவு செய்தாலும் சுரண்டுவதை மட்டும் மனதில் வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்கள் எவ்வளவு செலவு செய்தாலும் சட்டசபைக்கு வருவதற்கு கஷ்டமாகத்தான் இருக்கும். தன்னைச் சுற்றியிருக்கும் பலரைக் கவனித்தால் தெரியும். பணமற்றவர்கள் அவர்களோடு சேர்ந்து கொண்டு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதை காணலாம், பொது மக்களின் பலம் காரணமாக. அவர்கள், சேவை செய்ததால், சேவை செய்தவர்களை கிண்டல் செய்யாத காரணத்தால், பலர் ஆயிரக்கணக்கில் மட்டும் செலவு செய்து வந்திருக்கிறார்கள் என்பதை லட்சக்கணக்கில் செலவு செய்தவர்கள் மனதில் கொள்ள வேண்டும். கண்ணை மூடிக்கொண்டு உலகமே இருண்டு விட்டது என்று கூறுவதால் ஒரு பலனுமில்லை. அரசாங்கத்தை தாக்கி கூற வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் தங்கள் வாழ்க்கையில் இடைஞ்சலாக இருப்பவர்கள் அழிந்து போக வேண்டுமென்று நினைப்பவர்கள் காட்டிற்கு சென்று தவமோ அல்லது யோகமோ செய்துகொண்டிருக்கட்டும், பாக்கி மனிதர்களின் வாழ்க்கையைப் பற்றி கவலைப் படாமல். அங்கு அவர்கள் நன்கு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கலாம். ஒரு தொந்தரவும் இருக்காது. அங்கு யாரும் பீடி, சிகரெட் குடிக்க மாட்டார்கள். எந்த வேலையும் செய்யவேண்டிய அவசியமில்லை. (குறுக்கீடு) வேட்டி கூட கட்டவேண்டியதில்லை, மர உறி போதும். அந்தமாதிரி ஒரு நிலைக்கு போவதில் எனக்கு ஆட்சேபணையில்லை என்று சொல்லிக் கொண்டு, சமீப காலத்தில் ஏற்பட்ட மழையைப் பற்றி கவர்னர்பிரான் அவர்கள் உரையில் அதனால் ஏற்பட்ட நன்மை பற்றி சொல்லியிருக்கிறார்கள். இதில் இன்னொன்றையும் பாராட்ட வேண்டும். மழை பெய்து கொண்டிருந்தபோது மந்திரிகள் வந்தது மட்டுமல்ல. நமது அதிகாரிகள் அத்தனை பேர்களும் இந்தத் தடவைபோல், ஒரு சந்தர்ப்பத்திலும் வெள்ளம் வந்த போது மக்களுக்கு உடனுக்குடனே நல்லமுறையில் உதவி செய்த ஒரு நிலை ஏற்பட்டதை நான் பார்த்ததே இல்லை. தஞ்சை ஜில்லாவில் வெள்ளம் புகுந்து அழிவு வேலை செய்து கொண்டிருந்தபோது நல்லமுறையில் பரிகாரங்கள் உடனுக்குடன் கிடைத்தது. இரவு 12 மணிக்கு பாதிக்கப்பட்ட குடிபடைகளுக்கு இரவு 2 மணிக்கெல்லாம் எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுக்கப்பட்டது. மதிப்பிற்குரிய மின்சார அமைச்சர் அவர்களும், மதிப்பிற்குரிய ஹரிஜன இலாகா அமைச்சர் அவர்களும் அங்கு வந்து, இரவு 10, 12 மணிக்கு தஞ்சையில் கூட்டம் போட்டு பரிகாரம் அளிக்க திட்டம் வகுக்கும் முன்னரே அதிகாரிகள் வெகு தீவிரமாக நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு கட்டுமரங்கள் அனுப்பவேண்டிய இடங்களுக்கு அவைகளை அனுப்பி, அரிசி கொடுக்கவேண்டிய இடங்களுக்கு அரிசி கொடுத்து, எங்கெங்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளையெல்லாம் செய்து, மக்களுக்கு சிறந்த

23rd January 1961] [Sri G. Narayanaswami Naidu]

முறையில் உதவி செய்திருக்கிறார்கள். அவர்களையும் நாம் பாராட்ட வேண்டும். இன்னொரு விட்டுப்போன விஷயம். மழையால் எல்லாயிடங்களிலும் நன்மை ஏற்பட்டது என்று சொல்ல முடியாது. மழையால் பாதிக்கப்பட்ட இடங்கள், மழைக்குப் பின்னால் பூச்சியால் பாதிக்கப்பட்டயிடங்கள் எல்லாம் அமோகமாக ஆங்காங்கு பெருகிவருகிறது என்பதை மனதில் ஏற்றுக்கொள்ள வேண்டும். எங்கள் தாலுகாவில் கீழ்ப் பகுதி பூராவும் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டது சொற்பம் என்றால் பூச்சியால் பாதிக்கப்பட்டது மிகக் கடுமையாகயிருக்கிறது என்பதை நான் சர்க்கார் கவனத்திற்கு கொண்டுவர விரும்பு கிறேன். இப்பொழுது வந்திருக்கிற பூச்சி, ரொம்ப ரொம்ப கடுமையான பூச்சி. ஒன்றிரண்டு தினங்களில் ஒரு ஏக்கர் பூராவையும், வைக்கோல் கூட இல்லாது பாழ் அழித்து விடுகிறது. எவ்வளவு மருந்து தெளித்தாலும் பலன் இல்லாமல் இருக்கிறது. ஏராளமான நிலம் வைத்திருப்பவர்கள் அதைப்பற்றி கவலைப் படாமல் இருக்கலாம். ஆனால் சாகுபடி செய்கிறவர்களை நாளைய தினம் இந்தக் காரணத்தை வைத்துக் கொண்டு வெளியேற்றலாம். இதை சர்க்கார் நன்கு உணரவேண்டும். இந்த நிலையில் ஒரு சில நிலச்சுவாந்தார்கள் அடுத்த வருடம் பாக்கியைக் கொடுத்து விடலாம், நீங்கள் எழுதிக் கொடுத்தால் போதும் என்று அவர்களை ஏமாற்றி அறுவடை செய்யச்சொல்லி பாக்கியிருப்பதற்காக அவர்களை நிலத்திலிருந்து அப்புறப்படுத்த ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள்.

இன்னும் பல இடங்களில் சீட்டுகள் கொடுக்கப்படாததின் காரணமாக குடிபடைகள் சாகுபடி செய்திருந்த நிலங்களை தாங்களே சாகுபடி செய்ததாக சொல்லி பல இடங்களில் அறு வடை செய்து கொண்டிருக்கிறார்கள். இதற்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் அவர்கள் திருநெல்வேலியையும் தஞ்சாவூரை யும் இணைத்து, தஞ்சாவூரைப்பற்றி அதிகமாக அறிந்தவர் போல பேசினார்கள். காங்கிரஸ் தொழிற்சங்கத்திற்கு போலீஸ்காரர்கள் என்னவெல்லாமோ செய்கின்றார்கள், அவ்வாறு வேலை செய்யுமாறு அவர்கள் அச்சுறுத்தப்படுகிறார்கள். அதற்காக ரகசியமாக சுற்றறிக்கை அனுப்பப்படுகிறது என்றெல்லாம் பல குற்றச்சாட்டு களை சொன்னார்கள். அவர்கள் எங்கள் பக்கத்தில் வந்து பார்த் தால் நன்றாக புரிந்து கொள்வார்கள், பெரும்பகுதி போலீஸ்காரர் களும் பெருவாரியாக இருக்கின்ற நிலச்சுவாந்தார்கள் பக்கத்தில் தான் இருப்பார்கள், நமது நண்பர் அவர்களைப்போல், என்பதை. எங்கள் பகுதியில் வலங்கைமானுக்கு பக்கத்தில் 40, 50 குடும்பங்கள் இன்று போலீஸ் நடவடிக்கையின் காரணமாக, நட்ட நடவை எல்லாம் விட்டு விட்டு, சட்டம் தெரியாத காரணத்தினால் அப்புறப் படுத்தப்பட்டிருக்கிறார்கள் என்பதை சர்க்காருடைய கவனத்திற்கு கொண்டு வருகிறேன். இன்னும் இது போன்று பல்வேறு இடங் களிலும் குடிபடைகள் ரசீது பெறாத காரணத்தினால் வெளியேற்றப் படுகிறார்கள். இங்கே பலர் குறிப்பிட்டார்கள், வெள்ளைக்காரன் காலத்தில் இம்மாதிரி சட்டத்திட்டங்கள் இல்லையே, அப்போது

[Sri G. Narayanaswami Naidu] [23rd January 1961

எல்லாம் நடக்கவில்லையா, அப்போது ரசீதுகள் எல்லாம் கொடுக்காமல் இருந்ததில்லையா என்று கேட்டார்கள். அதே முறையில் தான், அந்த நம்பிக்கையிலேயே ரசீது வாங்காமல் இருந்தார்கள். இந்த நம்பிக்கையை பயன்படுத்திக்கொண்டுதான் இப்போது குடிபடைகள் வெளியேற்றப்படுகிறார்கள். இன்னும் இந்த வருஷத்தில் இம்மாதிரி பல இடங்களில் நடைபெற ஏதுக்கள் இருப்பதால் சர்க்கார் உடனடியாக நல்ல அதிகாரிகளை நியமித்து பாதிக்கப்பட்ட இடங்கள் எவை எவை, அதற்கு பரிகாரங்கள் என்ன என்பதைப்பற்றி எல்லாம் உடனடியாக யோசிக்காவிட்டால் இந்தச் சட்டங்கள் எல்லாம் யாருக்காக செய்தோமோ, அவர்கள் இதனால் பெரும்பகுதியாக பாதிக்கப்பட்டவர்களாகவும், பலன்பெறுபவர்கள் சிறு பகுதியினராகவும் மாறிவிடுவார்கள் என்பதை நான் சர்க்காருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கூட்டுறவு சங்கங்கள் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று ராஜ பிரதிநிதி முதல் சாதாரண அரசியல் வாதிகள் வரையிலும் பல வகையிலும் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரை பல இடங்களில் கூட்டுறவு சங்கங்களிலிருந்து கடன் பெறுவது மிக மிக கஷ்டமாயிருக்கிறது. இந்த கூட்டுறவு முறையை யார் கவனிக்க வேண்டுமோ, எந்த அதிகாரிகள் கவனிக்கவேண்டுமோ அந்த அதிகாரிகளுக்கே கூட்டுறவு முறையில் நம்பிக்கை இருப்பதாக தெரியவில்லை. அப்படியே நம்பிக்கைஉள்ளவர்கள் வந்தாலும் கூட அங்குஇருக்கின்ற பெரிய நிலச்சுவாந்தார்கள் அவர்களுக்கு கூட்டுறவில் நம்பிக்கைஇல்லாத வகையில் மாற்றிவிடுகிறார்கள். அவ்வளவு சக்தி பெற்றிருக்கிறார் அங்கிருக்கின்ற பெரிய நிலச்சுவாந்தார்களாகிய பண்டார சந்நதிகள். மந்திரிகளை கூட கவனிக்காமல் அவர்கள் விரும்பியபடியே அவர்கள் எண்ணுகின்ற காரியங்களை சாதிப்பதற்கு பண்டார சந்நதிகள் பல அதிகாரிகளை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆஸ்திகத்தை பரப்புவதற்கு என்று சொல்லிக்கொண்டு, பண்டார சந்நதிகளுக்கு என்னென்ன காரியங்கள் நடைபெற வேண்டுமோ அவைகளை எல்லாம் நடத்துவதற்கு, அதற்காக எந்த அதிகாரிகளை அணுக வேண்டுமோ அதற்கு தகுந்தபடி ஆட்களை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதற்கென்று ஒரு பிரச்சார இலாகாவை வைத்துக்கொண்டிருக்கிறார்கள், அதற்கென்று விஸ்தாரமான ஒரு கட்டிடத்தை சென்னையில் ஏற்படுத்தி, இதற்கென்றே ஒரு இலாகாவை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, எம்.எல்.ஏ-க்களில் யார் யாரை எவ்விதம் சரிப்படுத்த வேண்டும், யார் யாரை சாதகமாக பயன்படுத்திக்கொள்ள வேண்டும், இதற்கு விரோதமாய் இருக்கின்றவர்களை எவ்விதம் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்பதையெல்லாம் கவனித்துக்கொள்ளுகின்ற முறையில், கடவுளின் பெயரால், பலரை நியமித்து, ஒரு இலாகாவையே நடத்தி வருகிறார்கள். அதில் நாவலர்கள், பாவலர்கள் இன்னும் இது போன்ற பலர் இருக்கின்றார்கள். இவைகளை எல்லாம் ஏற்படுத்தி வைத்துக்கொண்டு பண்டார சந்நதிகள் விவசாயிகளை அப்புறப்படுத்திக்கொண்டிருக்

23rd January 1961] [Sri G. Narayanaswami Naidu]

கிறார்கள். சர்க்கார் போடும் சட்டத்திட்டங்களை எல்லாம் அவர்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். குற்றாலம் என்கிற ஊரில் இம்மாதிரி சச்சரவு ஏற்பட்டதின் காரணமாக நிலங்களைகூட்டுறவு சங்கத்திற்காக மந்திரியின் கையில் ஒப்படைத்தார்கள். "அன்பும் சிவமும் வேறல்ல, இரண்டும் ஒன்றே" என்று சொல்லக்கூடிய இந்த பண்டார சந்நதிகள் குடிபடைகளின் கையிலிருந்த நிலத்தை மாற்றி மந்திரிகளின் கையில் கொடுத்தார்கள். பின்னால் அங்குள்ள ஆயிரக்கணக்கான ஏர்களை பூட்டி ஓரே நாளில் உழுதுகொடுத்தோம். அவ்விதம் இருந்தும் அதற்கு சரியான முறையில் நிலக் கணக்கு கொடுக்க வில்லை. எல்லாம் கடவுளுக்கு, சுவாமிக்கு கொடுப்பதாக சொல்லப்படுகிறதே தவிர உண்மையாக அங்கு சுவாமிக்கு அளிப்பது இல்லை. ஆனால் அதற்கான வவுச்சர்களை தயார் செய்து வைத்துக்கொள்வார்கள். ஸேல்ஸ்டாக்ஸ் வந்தவுடன், அல்லது இன்கம் டாக்ஸ் வந்தவுடன் அதற்கு தகுந்தவாறு கணக்கெழுதி வவுச்சர்களை தயார் செய்து கொடுக்கக் கூடிய கணக்குப்பிள்ளைகள் இருக்கிறார்கள். இதற்கென்று சில நிபுணர்கள் இருக்கிறார்கள். இவர்களைக்கொண்டு கணக்கெழுதி காட்டி, தங்கள் காரியத்தை முடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு மணி நெல் கூட பாக்கியில்லாமல் சென்ற ஆண்டு கொடுத்தும் கூட அந்தச் சங்கத்தில் உள்ள விவசாயிகளுக்கு குத்தகைப் பத்திரம் எழுதிக் கொடுக்காமல் காலங்கடத்திக் கொண்டிருக்கிறார்கள். அதோடு மட்டுமல்ல, குடிபடைகளின்மீது பல கிரிமினல் கேஸ்களை போட்டுவிடுகிறார்கள். கோர்ட்டுகளில் கோயிலுக்கு நெல் இல்லை, திருவிளக்கு ஏற்றுவதற்கு வழியில்லை என்றெல்லாம் வக்கீல் வைத்து வாதாடுகிறார்கள் ஆஸ்திக புத்தியுடையவர்கள். இந்த நிலையில் கூட்டுறவு சங்கங்களை நடத்த முடியாத நிலையில் கொண்டுபோய் விடுகிறார்கள். முன்னால் பொள்ளாச்சி செட்டியார் என்பவருக்கு குத்தகை உரிமை இருந்தது, பின்னால் அந்த கூட்டுறவு சங்கத்திற்கு கொடுத்தவுடன் அதில் சேர்ந்திருந்த 40 எக்கர் புஞ்சை நிலத்தை கொடுப்பதற்கில்லை என்று தகராறு செய்து கொண்டிருக்கிறார்கள். இதற்காக அங்குள்ள விவசாயிகள் பலத்த கிளர்ச்சி செய்வதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே மந்திரி அவர்கள் உடனடியாக கவனித்து தொந்தரவு ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

வக்கிரமாரி என்ற இடத்தில் பாக்கி கொடுக்க வேண்டிய பழைய குத்தகைகாரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் 40 ஆயிரம், 50 ஆயிரம், 60 ஆயிரம், 80 ஆயிரம் என்று பாக்கி போட்டிருக்கிறார்கள். அவர்கள் மீதெல்லாம் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆனால் 3 ரூபாய் பாக்கியிருந்தால் அதற்காக 3 கோர்ட்டுகளுக்குப் போக தயாராக இருக்கிறார்கள் என்பதை இந்த நடவடிக்கைகளையெல்லாம் கவனித்துக்கொண்டிருப்பவர்களுக்குத் தெரியும். என்டோமென்ட் மந்திரி அவர்கள் இந்தச் சட்டத்தை யாருக்கு சாதகமாக இருக்கவேண்டும் என்று செய்தார்களோ, அதற்கு நேர்விரோதமாக போய்க்கொண்டிருக்

கிறது என்பது மட்டுமல்ல, இதனுல் சர்க்காருக்கு பலம் ஏற்படுவதற்குப் பதிலாக பலகீனம்தான் ஏற்படுகிறது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஒரு வேண்டுகோளை தெரிவித்துக்கொள்கிறேன். மங்கநல்லூரிலிருந்து பொறையாறு வரையிலும் இருக்கின்ற ரோட்டில் கப்பி போட வேண்டும் என்று பல தடவைகள் கேட்டிருக்கிருேம். இதில் பி.டப்ளியு.டி. இலாகாவினருக்கும் ஹைவேஸ்-க்கும் இருக்கின்ற தகராறு காரணமாக இன்னும் முன்னுல் இருந்தபடியே இருக்கிறது. ஆகவே உடனடியாக அந்த ரோட்டுக்கு கப்பிப் போட்டுக் கொடுத்தால் நன்ருக இருக்கும். அதே போன்றுதான் காளி என்கிற ஊருக்கு ரோடு போட வேண்டும் என்று கேட்டுக்கொண்டோம். அதற்கு ஒதுக்கப்பட்ட பணத்தை, என் பக்கத்தில் இருக்கும் அங்கத்தினர் அவர்கள் வாலிபமும் ஊக்கமும் உள்ள அங்கத்தினர், அவர் அனுமதி வாங்கிக்கொண்டு எடுத்துக் கொண்டு போய் விட்டார், ஆகவே அதற்கும் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு, கவர்னர் பெருமான் அவர்கள் உரைக்கு தெரிவிக்கும் நன்றி தீர்மானத்தை முழு மூச்சுடன் ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri K. SATTANATHA KARAYALAR :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கவர்னர் பெருமானுடைய உரை மீது நடக்கும் இந்த விவாதத்தில் நானும் கலந்துகொண்டு இரண்டொரு விஷயங்களைக் குறிப்பிட அவாவுறுகின்றேன்.

இந்த உரையைப் படிக்கக் கூடிய சாதாரண ஒரு மனிதனுக்குத் தோன்றுவது—தோன்றக் கூடியது—ஏதோ நாட்டில் இருக்கக் கூடிய விலைவாசிகளானது குறைந்து கொண்டிருக்கிறது என்பதாகும். அப்படி குறைந்துகொண்டிருப்பது போல இதிலே ஒரு வரி இருக்கிறது. கவர்னர் பெருமானுடைய உரையைப் படிக்கும் போது நான் கூட அங்கலாய்த்து விட்டேன். ஏனெனில் இதில் வந்திருக்கக் கூடிய விஷயம் எந்த அளவுக்கு நாட்டின் யதார்த்த நிலைக்குப் பொருந்தும் என்று என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. "நல்ல மகசூல் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுவதால் விலைவாசிகளும் குறையத் தொடங்கியுள்ளன" என்று சொல்லும்போது நாட்டிலே ஏதோ விலைவாசிகளானது உயர்ந்திருந்தது, இப்போது சரிந்துகொண்டு வருகின்ற மாதிரி தோன்றுகிறது. நான் அதைச் சரியாகப் புரிந்துகொள்வதற்காக, நமது சர்க்காருடைய புள்ளிவிவர இலாகாவிடமிருந்து தகவல் சேகரித்து அந்தத் தகவலை இங்கு சொல்லலாம் என்று நினைக்கிறேன். 1960-ம் ஆண்டிலே ஜனவரி தொடக்கத்தில் இரண்டாவது ரக அரிசியின் விலை ஒரு மணங்குக்கு ரூ. 20.06-ஆக இருந்தது, மே மாதம் வரும் போது ரூ. 21.41-ஆக உயர்ந்து, செப்டம்பர் வரும்போது ரூ. 22.76-ஆக உயர்ந்து, டிஸம்பர் வரும்போது ரூ. 23.19-ஆக வந்து அந்த இலக்கை எட்டியுள்ளது. அதே போல சாதாரண மக்கள்

23rd January 1961] [Sri K. Sattanatha Karayalar]

உபயோகப்படுத்தக் கூடிய சோளம் ஒரு மணங்கு ரூ. 16.33-ஆக இருந்தது ஆண்டு முடிவில் ரூ. 17.07-ஆக உயர்ந்திருக்கிறது. ராகியை எடுத்துக்கொண்டால் ரூ. 14.94-ஆக இருந்தது ரூ. 15.50-ஆக உயர்ந்திருக்கிறது. இது ஒரு குறிப்பிட்ட சில பொருள் களுக்கு மாத்திரமன்று. இதரப் பொருள்களைப் பார்த்தாலும், அவைகளும் கணிசமான அளவுக்கு விலை உயர்ந்திருக்கிறது. இவைகள் யாவும் சர்க்கார் தரப்பிலிருந்தே, சர்க்காருடைய புள்ளி விவர இலாகா தயாரித்துக் கொடுத்துள்ள புள்ளிவிவரங்களாகும். சென்னையைப் பொருத்த மட்டில் மிகவும் உயர்ந்திருக்கக் கூடியது விறகின் விலையாகும். காஷுவரினு அல்லாமல் மற்ற விறகு, ஒரு டன் ஜனவரி மாதத்தில் ரூ. 44.37-ஆக இருந்தது, ஜூன், ஜூலையில் ரூ. 51-ஆக உயர்ந்து, அக்டோபரில் ரூ. 49-ஆக உயர்ந்து, நவம்பரில் ரூ. 60.70-ஆக உயர்ந்து, டிஸம்பரில் ரூ. 75.94-ஆக உயர்ந்திருக் கிறது. இன்று மார்க்கெட்டிலே சென்று நல்ல விறகாக வாங்க வேண்டுமானால், காஷுவரினு விறகு வாங்கவேண்டுமானால் இதைப் பார்க்கிலும் அதிகமாக, ரூ. 85-க்குக் குறைந்து வாங்க முடியாத நிலை இருக்கிறது. ஆனால் கவர்னருடைய உரையிலே விலைவாசி கள் குறையத் தொடங்கி விட்டன என்று மாத்திரம் சூசகமாகச் சொல்லப்பட்டுள்ளது. இன்று இருக்கக் கூடிய காஸ்ட் ஆப் லிவிங் இண்டெக்ஸ் பற்றி கிடைத்திருக்கக் கூடிய புள்ளி விவரங் களை எடுத்துப் பார்த்தால், 1960-ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் 441-ஆக இருந்தது படிப்படியாக உயர்ந்து, அக்டோபரில் 477 ஆகி, டிஸம்பரில் 488-ஆக உயர்ந்த நிலையைத் தொட்டிருக்கிறது. இப்படி விலைவாசிகளானது உயர்ந்துக்கொண்டே போய்க்கொண்டிருக் கின்றதே தவிர குறைவதற்குள்ள சூசகம் ஏதும் இல்லை. பிளா னிங் கமிட்டியின் பல குழுக்களில் ஒரு குழு சமீபத்தில் பார்லி மெண்டில் சமர்ப்பித்த அறிக்கையில் விலைவாசிகள் பற்றி பொது வாக அகில இந்திய ரீதியில் குறிப்பிடும்போது.

**"The index of wholesale prices (1952–53) showed a rise of 6·5 per cent for the 11 months ended November 1960 as compared to a rise of only 3·6 per cent for the corresponding period in 1959".**

என்று அந்த அறிக்கையிலே கழிந்த ஆண்டு அதாவது 1959-ம் ஆண்டு எந்த அளவு உயர்ந்ததோ (அப்போது 6½ சதவீதம் உயர்ந்தது), இந்த ஆண்டு அதே காலத்தில் அதைப் போல இரண்டு பங்கு உயர்ந்திருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளது. இப்படி விலைவாசி ஒரேயடியாக உயர்ந்திருக்கும்போது, எதோ ஒரு சமயத்தில் ஓரிடத்தில் டன்னுக்கு 5 ரூபாய் குறைந்துவிட்டால், அதைப்பற்றி உடனே கவர்னருடைய உரையிலே இப்படி புகுத்துவது நியாயத்திற்குப் புறம் பானது. விலைவாசி குறைவு என்று சொன்னால், கழிந்த ஆண்டு இதே காலத்தில், அறுவடை கால கட்டத்தில் என்ன விலை இருந்ததோ அதோடு ஒப்பிட்டுப் பார்த்து விலைவாசி குறைந்திருக்கிறது, குறைந்துகொண்டு வருகிறது என்று சொன்னால், அது நியாயமாகும், நேர்மையாகவும் இருக்கும்.

6 சதவிகிதம், 7 சதவிகிதம் கூடியதில் 5 சதவிகிதம் குறைந்தால் அதைக் காரணமாகக் காட்டி விலைவாசிகள் குறைந்திருக்கிறது என்று சொல்வது எந்த அளவு நேர்மையாகும் என்று நீங்களே சிந்திக்க விட்டு விடுகின்றேன்.

அடுத்தபடியாக இந்த உரையைப் பார்த்தால் அதில் எந்த விதமான கொள்கை அறிக்கைகளையும் காணவில்லை. பொதுவாக கவர்னர் பெருமான் வரும் ஆண்டுக்கான கொள்கை விளக்கங்களைக் கூறியிருக்கவேண்டும். இந்த உரையைப் பார்த்தால் தயாரித்தவர்கள் மனதில் தேர்தல் தான் மனதில் இருக்கிறது என்பது நன்கு புரிகின்றது. நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட்டைச் சமர்ப்பித்துப் பேசும்போது அதில் ஏதாவது சொல்லலாம், கவர்னருக்கு அதை ஏன் கொடுக்கவேண்டும் என்ற காரணத்தினால் இதில் ஒன்றும் இல்லையோ என்னவோ? இதில் கொடுத்திருப்பதெல்லாம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றியே. அதைப் பற்றி முன் சொன்ன பல்லவியையே சொல்லியிருக்கிறார்கள். இதிலே ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டியிருக்கிறது. திட்டத்திலே 100 கோடி ரூபாய் அளவுக்கு வெட்டு வந்து விட்டது. ஆனால், இதில் விசேஷமாக திட்டத்தில் எந்தக் குறைவுமில்லாமல் நிறைவேற்றப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நூறு கோடி ரூபாய் வெட்டு வந்தும் திட்டத்தில் வெட்டு இல்லையென்றால், திட்டமிட்டதில் தவறு இருக்கவேண்டும். அல்லது 25 சத விகிதம் எஸ்டிமேடெட் ரேட்ஸை கூட்டிப் போட்டிருக்கவேண்டும். இல்லையானால் 100 கோடி ரூபாய் அளவுக்கு எந்தத் திட்டத்தை விட்டிருக்கிறார்கள்? குறிப்பாக தொழில் திட்டத்திலும், மின்சாரத் திட்டத்திலும் வெட்டு இல்லை என்று சொல்கிறார்கள். அப்படி இரண்டு இனத்தை எடுத்துவிட்டால் விவசாயம், சமுதாய நலத்திட்டம் இவைகளுக்கு 76 கோடி ரூபாய், நீர்ப்பாசனத்திற்கு 40 கோடி ரூபாய் போன்று மொத்தம் 234 கோடி ரூபாய் ஒதுக்கினோம். சோஷல் சர்விஸ்ஸுக்கு 111 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. வெட்டு என்று சொன்னால், முக்கியமாகச் சொல்லப்பட்டிருக்கின்ற பின் தங்கிய சமூகத்தினருக்கு, போக்குவரத்திற்கு, குடிசைத் தொழில்களுக்கு, சுகாதாரம், குடி தண்ணீர் போன்ற இனங்களுக்கு செலவழிக்க இருக்கின்ற தொகையில் பெரிய வெட்டு ஏற்படும். அப்படிப் பார்க்கும்போது கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் செலவழித்த தொகையைக் கூட செலவழிக்க முடியாது. கிராமாந்திரங்களுக்கு அளிக்கப்படவேண்டிய வசதிகளில் இந்த வெட்டுக் காரணமாக எவ்வளவோ குறைவுபடும் என்பதில் சந்தேகமில்லை. அகில இந்திய ரீதியில் இந்த இனத்திற்கு 1,250 கோடி செலவழிக்க இருக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு பார்க்கும்போது கிட்டத் தட்ட 111 கோடி ரூபாய் நம் மாநிலத்தில் செலவழிக்க வேண்டும். இந்த மாநிலத்திற்கு 100 கோடி வெட்டு என்று சொன்னால், அதிலும் தொழில், மின்சாரம் இரண்டும் இதனால் பாதிக்கப்படாது என்று சொன்னால், நாட்டிலே வருகின்ற ஐந்தாண்டுகளில் செய்யக் கூடிய சுகாதார வசதிகள், மருத்துவ வசதி

23rd January 1961] [Sri K. Sattanatha Karayalar]

கள், கல்வி, பின் தங்கியவர்களுக்குச் செலவு செய்வது எல்லாம் நிச்சயமாகக் குறையும். குறிப்பாக ஹரிஜனங்களுக்கென்று செய்யக் கூடிய சேவையில் பெரிய வெட்டு ஏற்படும் என்று வற்புறுத்த அவாவுகிறேன். பொதுவாக என்ன என்ன செய்ய விருக்கிறார்கள் என்று ஓரளவுக்குக் கூறினால் நன்மை தருவதாக இருக்கும்.

அடுத்தபடியாக மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு எந்த அடிப்படையிலே அகில இந்திய ரீதியில் பணம் ஒதுக்கினார்கள் என்று தெரிய அவாவுறுகிறேன். பிற மாநிலங்களுக்கு பணம் ஒதுக்கியிருப்பதைச் சற்று கவனிக்கவேண்டும். அதில் கேரளம் தான் மிக மிக அதிர்ஷ்டம் செய்த இடம். ஒன்றரை கோடி மலையாளிகள் இருக்கக் கூடிய கேரளத்திற்கு 107 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அதே நேரத்தில் 2½ பங்கு அதிகமாக ஜனத்தொகையுள்ள தமிழகத்திற்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கி யிருக்கிறார்கள். இருநூற்று தொன்னூற்றொரு கோடி ரூபாய் செலவு செய்வதில் நமது மாநிலத்தினுடைய பங்கு 101 கோடி என்றிருக்கிறது. மத்திய சர்க்காரின் கண்ட்ரிப்யூஷன் 190 கோடி என்றிருக்கிறது.

ஆனால் அதே நேரத்தில் கேரளத்திற்குக் கொடுத்திருக்கக்கூடிய தொகை அப்படியல்ல. சதுர மைல் விகிதாசாரப்படி கொடுக்கப் பட்டிருக்கிறதா? ஒரு சதுர மைலுக்கு இவ்வளவு என்ற அடிப் படையில்? அப்படி நிலப்பரப்பை வைத்துப் பார்த்தால், கேரளத்திற்கு கொடுத்திருக்கக்கூடியது உண்மையிலேயே மிக மிக அதிகமானது என்றுதான் சொல்லவேண்டும். அங்கு ஸ்திரமான ஆட்சி நடத்த முடியாத நிலைமை முன்பு இருந்ததால், அதை யொட்டி அவ்வாறு கொடுத்தார்களோ என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. ஒரு சதுர மைலுக்கு ரூ. 1,13,000 கொடுத் திருக்கிறார்கள். அத்தொகையை நமது மாகாணத்திற்கு கொடுத்துள்ளதோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மூன்றில் ஒரு பங்குகூட இல்லை. ஒரிசாவை எடுத்துக்கொண்டால், இன்னும் வேடிக்கையாக இருக்கிறது. ஒரிசாவுக்கு மொத்தம் 160 கோடி ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த 160 கோடியிலே அந்த மாகாணத்திலிருந்து வரக்கூடிய முதலீடு ரூ. 28 கோடிதான். அதாவது அதைப் பார்க்கிலும் நான்கு பங்கு அதாவது 132 கோடி ரூபாய் மத்திய சர்க்காருடைய பங்காக கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஒரு மாகாணத்திற்கு ஒரு விதம், இன்னொரு மாகாணத்திற்கு ஒரு விதம் என்று கொடுக்கக்கூடிய முறையில் வித்தியாசம் இருக்கிறது. சில மாகாணங்களுக்கு இன்னும் குறைவாக மோசடி செய்திருக் கிறார்கள். ஆனால், சென்னை அதிலிருந்து தப்பி விட்டது. பணம் ஒதுக்குவதில் ஒரு அடிப்படை அல்லது ஒரு வரையறை இருக்கவேண்டும். ஒன்று நிலப்பரப்பை அடிப்படையாக கொண்டிருக்க வேண்டும். அல்லது ஜனத்தொகையை அடிப் படையாகக் கொண்டிருக்க வேண்டும். அல்லது பின்தங்கிய

12-30 p.m.

மாகாணங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகம் கொடுக்கலாம் என்ற அடிப்படையாவது இருக்க வேண்டும். அப்படியில்லை, நம்மைக் காட்டிலும் ஆந்திராவிற்கு அதிகமாக கொடுத்திருக்கிறார்கள். அதைக் காட்டிலும் கேரளாவிற்கு அதிகமாக கொடுத்திருக்கிறார்கள். இந்த நிலையில்தான் திட்டத்திற்கு பணம் ஒதுக்கியிருக்கிறார்கள்.

எல்லோரைக் காட்டிலும் நாம் 2-வது ஐந்தாண்டுத் திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றியிருக்கிறோம். அப்படித் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக தீர்வை அதிகம் வசூல் செய்து வந்திருக்கிறோம். அப்படி நல்லபடியாக நடந்துகொண்டும், நமக்கு எந்த விதமான பாராட்டுதலும் இல்லை. கிடைக்க வேண்டிய பங்கும் நமக்கு கிடைக்கவில்லை. மற்ற மாகாணங்கள் தாங்கள் திரட்ட வேண்டிய பங்கைக்கூட திரட்ட முடியாமல் போய் விட்டன. அப்படியிருந்தும் அவைகளுக்கெல்லாம் அதிகமாக தொகை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேசமயத்தில் நம்மால் எந்தெந்த வகைகளிலெல்லாம் வரி போட்டு வசூலிக்க முடியுமோ, அந்த வகைகளில் எல்லாம் வசூலித்தும், நமக்கு பாராட்டுதல்கூட தெரிவிக்கவில்லை. பொதுவாக மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகள் ஒரு அடிப்படையை வைத்துக் கொடுத்ததாகத் தெரியவில்லை. எந்த அடிப்படையான இன்டெக்சும் காணவில்லை.

இப்படி வரையறையில்லாது ஒதுக்கப்பட்டுள்ள முறையிலே 3-வது ஐந்தாண்டுத் திட்டம் இருக்கிறது. அப்படியிருந்தும் தொழில் துறைக்கு முக்கியமான மின்சாரத் திட்டங்கள் நல்ல முறையிலே நடந்திருப்பதையும், நடத்த யிருப்பதற்கும் நன்றியையும், பாராட்டுதலையும் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால், அதே நேரத்திலே அத்தியாவசியமான, மிகவும் தேவையான பல திட்டங்களைக் கைவிட்டுவிட வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அந்நிலைமை சீரடைய வேண்டிய முயற்சி எடுக்க வேண்டுமென்று கோருகிறேன்.

அடுத்து, மத்திய சர்க்காரே நேரடியாக செய்யக்கூடிய தொழில்கள் என்னென்ன? அதற்கு என்ன முதலீடுகள் கிடைக்குமென்ற விவரங்கள் எதுவும் நிச்சயமாகத் தெரியவில்லை. இன்று ஹெவி எலெக்ட்ரிகல் பிளாண்ட் நமக்கு கிடைக்கும் என்று சொல்கிறார்கள். ஆனால் பக்கத்தில் உள்ள ஆந்திரர்கள் தங்களுக்குக் கிடைக்குமென்று கூறுகிறார்கள். அதேபோல் மைசூரில் உள்ளவர்கள் தங்களுக்கு கிடைக்க இருக்கிறது என்று சொல்கிறார்கள். இதிலே யாருக்கு கிடைக்குமென்பது நிச்சயமாகத் தெரியவில்லை. எவற்றிற்கு முதலிடம் கொடுப்பார்கள் என்றும் தெரியவில்லை. ஆகவே இதிலே மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டு, நமது மாகாணத்திற்கு நிச்சயமாகக் கிடைத்து விடுமென்றாலும்கூட, முதலிடம் பெற்று தொழில் துறையிலே மேலும் மேலும் வளர்ச்சியடையவேண்டிய முயற்சி எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதிலும் அடாமிக் பிளாண்ட் நிறுவ முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்துகிறேன்.

23rd January 1961] [Sri K. Sattanatha Karayalar]

புதிய ரயில் பாதையை பொறுத்தவரையில் நமக்கு முன்பு கிடைக்குமா என்ற பயமிருந்தது. இப்போது நமக்கு கிடைக்குமென்று உறுதி சொல்லியிருக்கிறார்கள். எந்த அளவு கிடைக்கும் என்று குறிப்பிடப்படவில்லை. தெற்கே குறிப்பாக, நெல்லை மாவட்டத்தையும், கன்னியாகுமரியையும் இணைக்கும் ரயில் பாதை அமைப்பை முதலில் எடுத்துக் கொள்ள வேண்டும். கன்னியாகுமரி ஜில்லா முன்பு கேரளத்தோடு இணைக்கப்பட்டிருந்ததால், அதற்கு நெல்லையோடு பொருளாதார தொடர்பு கொள்ள முடியாமல் போயிற்று. இப்போதாவது பொருளாதார தொடர்பு வளர, குமரி முனையையும், நெல்லை மாவட்டத்தையும் இணைக்கக் கூடிய ரயில் போக்குவரத்தை உடனடியாக அமைக்க முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்கிறேன்.

சேது சமுத்திரத்தைப் பற்றி அறிவதற்காக இப்போது திரு. ஜே. எஸ். டேவிஸ் என்ற ஒரு அதிகாரியை மத்திய சர்க்கார் அனுப்பி, நடவடிக்கைகள் எடுப்பதற்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றனவா என்பதை அறிய நியமிக்கப்பட்டிருப்பதாக சமீபத்திலே பத்திரிகை வாயிலாகப் பார்த்தேன். அதையும் உடனடியாக கவனித்து இந்த 3-வது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்த்துக்கொள்ள முயற்சி எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதேபோல் தூத்துக்குடி துறைமுகம் எப்படியும் இத்திட்டத்தில் கண்டிப்பாக இடம் பெறும் என்று சொல்கிறார்கள். அது வெறும் பெயரளவில் இல்லாமல், தேர்தல் பிரச்சாரமாக இல்லாமல் நடைமுறையில் செய்யுமாறு, அதற்கான நடவடிக்கைகள் எடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

உணவு உற்பத்தியைப் பொறுத்தவரையில், நிலைமை திருப்திகரமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இந்நிலைமை ஓரளவு நல்ல மழை பெய்ததின் விளைவாக இச்சமயத்தில் இருக்கலாம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இன்றும் ரேஷன் கடைகளிலே பர்மா அரிசி கொடுக்கப்படுவதைப் பார்க்கலாம். நமது நாடு இன்னும் அந்த நிலைமையில்தான் இருக்கிறது. அதே போல் 1.7 கோடி டன் கோதுமை அமெரிக்காவில் இருந்து வாங்குகிறோம். சமீபத்திலே பர்மாவுடன் ஒரு உடன்பாடு கூட செய்து கொண்டோம். அதன்படி 30 ஆயிரம் டன் அரிசியை அங்கிருந்து வாங்குகிறோம் . இன்று நாட்டிலே நல்ல முறையிலே மழைபெய்து, நாடு செழித்திருக்கக்கூடிய நிலைமையிலே கூட உணவு தானியங்களை அன்னிய நாடுகளிலிருந்து தான் பெற வேண்டியிருக்கிறது, என்பதை மறந்துவிடக் கூடாது. உணவு தானியங்கள் நியாயமான விலைக்கு கிடைக்கக் கூடிய நிலை இன்றும் நாட்டிலே இல்லை என்பதைக் கூற விரும்புகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே விவசாயத் துறை எந்தவிதத்திலே முன்னேறியுள்ளது என்பதைக் கவனித்தால், விவசாயத்திற்கு மிக முக்கியமான அம்மோனியம் சல்பேடு சரியாக கிடைக்கவில்லை என்பது குறித்து பல எம். எல். ஏ.-க்கள் வருத்தம் தெரிவித்ததைக் காணலாம். வழக்கமாக ஒரு ஏக்கருக்கு

[Sri K. Sattanatha Karayalar] [23rd January 1961

80 பவுண்டு அம்மோனியம் சல்பேடு உரம் கொடுப்பதற்குப் பதில், 40 பவுண்டு உரமே உரத் தட்டுப்பாட்டின் காரணமாக கொடுக்கப் பட்டது நினைவிருக்கலாம். இந்த நிலைமையிலே உற்பத்தியை எவ்வாறு அதிகமாக எதிர்பார்க்க முடியும்? அது இல்லாமல் இவ் வாறு உர உற்பத்தி எப்படி குறைந்தது என்பது மிகவும் வேடிக் கையாக இருக்கிறது. 1954-ல் 340 ஆயிரம் டன் அமோனியம் சல்பேட் உரம் உற்பத்தியாகி உள்ளது. ஆனால் இன்று அந்த அளவுகூட உற்பத்தியாகுமா என்ற நிலைமைதான் ஏற்பட்டிருக் கிறது. அது எப்படியென்று பார்த்தால், 1955-லே 394 ஆயிரம் டன்னாக உற்பத்தி இருந்தது. ஆனால் இன்று 1959 வரையிலே உள்ள புள்ளிவிவரங்களைப் பார்த்தால், அது 378 டன்னாக குறைந் துள்ளது. அகில இந்திய ரீதியிலே சல்பேட் உரம் குறையக் காரணம் என்ன? இப்போது 1959-லே குறைந்ததற்கும், மிகக் குறைவாக குறைந்திருக்க வேண்டுமென்றே நம்புகிறேன். ஏனெனில் விவசாயிக்கு கிடைத்திருக்கக் கூடிய விநியோகத்தைப் பார்த்தால் மிகவும் குறைந்துள்ளது. இப்படியிருந்தால் எப்படி உணவு உற்பத்தி முன்பிருந்ததைவிட அதிகரிக்க முடியும்? ஆகவே இன்று உரம் தட்டுப்பாடின்றி விவசாயத்திற்கு, விவசாய மக்க ளுக்கு கிடைக்கக்கூடாத ஒரு சிக்கலான நிலைமைதான் ஏற்பட்டி ருக்கிறது. திட்டமிட்டுவிட்டால் மட்டும் போதாது. அதை நிறைவேற்றுவதற்கு வேண்டிய சாதனங்களைத் தட்டுப்பாடு இல்லாமல் கிடைக்கச் செய்யவேண்டும்.

தவிர, நமது சென்னை மாகாண சர்க்காருக்கு ஒரு பழக்கம் இருக்கிறது. சாதாரணமாக எந்தப் பிரச்னையைப் பற்றியும் முடிவு எடுக்குமுன், எல்லாக் கட்சியினரையும் குறிப்பாக சட்ட சபையிலாவது கலப்பது வழக்கம். ஆனால் சமீபத்திலே பலரை பாதிக்கக்கூடிய முறையில் ஒரு விஷயம் முடிவெடுக்கப்பட்டிருக் கிறது. நமது சபையிலே கூட 38 ரிசர்வ் தொகுதி அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். இந்த தொகுதிகளை பிரிக்க மத்திய சர்க்கார் முடிவு எடுத்திருக்கிறது. இதை மாகாண சர்க்கார் விரும்பவில்லை என்பதுகூட தெரியும். இருப்பினும் இம்முடிவு எடுக்கப்படும் போது, எதிர்க்கட்சியினரைக் கலந்து கொண்டுதான் எம்முடிவும் செய்யப்படுவதாகச் சொல்வதை நமது சர்க்கார் இவ்விஷயத்தில் சொல்ல முடியாது. இவ்விஷயத்தில் இந்த சர்க்காரை மத்திய சர்க்கார் கேட்டதாகக் கூட தெரியவில்லை. ஆயினும் ஏதோ கட்சி அளவிலே, அகில இந்திய காங்கிரஸ் எடுத்த முடிவை அப்படியே மத்திய அரசாங்கம் செயல்படுத்துகிறது என்றுதான் சொல்ல வேண்டும். இது எந்த அளவிலே ஒவ்வொரு மக்களையும் பாதிக் கிறது, இதிலுள்ள லாபநஷ்டங்கள் என்னென்ன என்பதை யெல்லாம் கவனிக்காது ஜனநாயகத்திற்குப் புறம்பான, விரோத மான முறையிலே இது செய்யப்பட்டிருக்கிறது என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு முன்பு பேசிய, குறிப்பாக திரு. ஆதிமூலம் அவர்கள் சொன்னதுபோல், இன்றுள்ள அதிகாரிகள் ஒவ்வொருவரும் காங்கிரஸ்காரர் என்னென்ன சொல்கிறார்களோ, அந்தந்தக்

23rd January 1961] [Sri K. Sattanatha Karayalar]

காரியங்களைத்தான் செய்யவேண்டுமென்ற மனப்பான்மை கொண்டவர்களாக இருப்பதைக் காண்கிறோம். என்னைப் பார்த்து பல ஆபீசர்கள் நான் கதர் அணிவதினாலே காங்கிரஸ் காரன் என்று எண்ணிக்கொண்டு, அந்த மனப்பான்மையுடன் பேசுவது உண்டு. குறிப்பாக சில உத்தியோகஸ்தர்களைச் சொல்ல முடியும். ஆனால், பெயரைச் சொல்ல விரும்பவில்லை. "நமது கட்சிக்காக" என்றே பேசுகிறார்கள். அதை நான் செவிமடுத்துக் கேட்டுக்கொண்டிருப்பேன். கடைசியிலேதான் நான் காங்கிரஸ் காரன் இல்லை என்று சொல்வது வழக்கம்.

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்று தெரிந்துகொள்ள முடியாத வகையில் அவர் எல்லாக் கட்சிகளிலும் தொடர்பு கொள்வது காரணமாய் இருக்கலாம்.

SRI K. SATTANATHA KARAYALAR : சரிதான், ஆனால், நான் சொல்ல வந்தது உத்தியோகஸ்தர்களைப் பற்றித்தான். காங்கிரஸ்காரர்களுக்குத்தான் நன்மை செய்ய வேண்டும் என்ற நிலைமையிலே உத்தியோகஸ்தர்கள் செயல்படுகிறார்கள். அவர் களுக்குக் கட்சி மனப்பான்மை எப்போதும் இருக்கக் கூடாது. இன்றுள்ள ஜனநாயகத்திலே இரண்டு கண்களைப் போல் இந்த இரண்டும் இருக்க வேண்டும். ஒன்று நிரந்தரமான நிர்வாகம். மற்றொன்று சட்டசபை. இவ்விரண்டையும் இரண்டு கண்களாகக் கொண்டே ஆட்சி நடைபெறுவதாக இருக்க வேண்டும். நிர் வாகத்திலே கட்சிக் கண்ணோட்டம் வரக்கூடாது. சட்டசபை முடிவை நிறைவேற்றக் கூடியவர்களாக உத்தியோகஸ்தர்கள் பணியாற்ற வேண்டுமேயல்லாது, கட்சிக் கண்ணோட்டத்திற்கே இதில் இடமிருக்கக் கூடாது என்று கூற விரும்புகிறேன். இந்த முறையிலே சர்க்காரில் இருப்பவர்கள் கட்சி நிர்வாகத்திற்காக அல்ல, அரசாங்கத்தில் நிரந்தரமாக இருக்கக்கூடிய உத்தி யோகஸ்தர்கள் என்ற கண்ணோட்டத்தோடு காரியங்கள் செய்யப் படவேண்டும். கேரளத்தில் கம்யூனிஸ்டு இம்மாதிரிதான் செய் தார்கள் என்று குற்றம் சாட்டினார்கள். அந்தக் குற்றம் இங்கு உங்களைச் சாரும். அப்படி இல்லாத முறையிலே காரியங்கள் நியாயமாகவும், நேர்மையாகவும் நடத்தப்படவேண்டும். உதாரணமாக, ஒரு மாவட்ட தண்டல்நாயகம் ஏதாவது தவறாக நடந்துகொண்டால், அந்த தவறை சுட்டிக்காட்டி கிளர்ச்சி செய்யவேண்டுமே தவிர, ஒரு கட்சிக்கு சாதகமாக ஒரு அதிகாரி நடந்துகொள்ளவில்லை என்று சொன்னால், அந்த மாவட்டத்தில் பொதுக்கூட்டங்களிலும் மற்ற இடங்களிலும் 'இந்த மாவட்டத் தில் இருக்கக்கூடிய உயர் அதிகாரிகளை நாங்கள் மாற்றி விடுவோம்' என்று ஒரு கட்சி மார்தட்டுமேயானால் அது அந்த கட்சி நிர்வாகத்தில் எந்த அளவு தலையிடுகிறார்கள் என்பது தெளிவு.

அடுத்தபடியாக நான் குறிப்பிட விரும்புவது நாட்டில் இருக்கக்கூடிய விதைப் பண்ணைகளைப் பற்றித்தான். விதைப் பண்ணைகளை செம்மைப் படுத்துவதற்காக ஒரு

[Sri K. Sattanatha Karayalar] [23rd January 1961

கோடி ரூபாய் ஒதுக்கப்படும் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. உரம் விவசாயிகளுக்கு எந்த விதத்தில் கிடைக்கிறது என்பது பற்றி சொன்னேன். விதை விநியோகத்தைப் பொறுத்த மட்டில் மிகவும் ஒரு மோசமான நிலைமை இருந்து வருகிறது. நல்ல விதை கிடைப்பதில்லை. நல்ல விதை கிடைக்கவேண்டுமென்றால், மிகச் செல்வாக்குள்ளவர்களுக்குத் தான் கிடைக்கிறது. மற்றபடி விதைப் பண்ணைகளில் கிடைக்கக்கூடிய விதைகள் சண்டும் சாவியுமாக இருக்கிறது. நிரந்தரமாக உத்திரவாதமான விதைகள் அல்ல. இந்தெந்த மாவட்டத்திற்கு இந்தெந்த விதைப்பண்ணைகள் என்று வரையறுக்க வேண்டும். என்னென்ன விதைகள் தேவையோ அந்தந்த விதைகளை எடுக்க வேண்டும். எப்படி எப்படியோ விதைப்பண்ணைகள் ஏற்படுத்தப் பட்டன. அது பழைய கதை. எஸ்டிமேட் கமிட்டி அதைப் பற்றி தீர்ப்பு கூறியிருக்கிறது. எடுத்த விதைப் பண்ணைகளை, சர்க்கார் ஏற்கனவே அதிக விலை தகாத விலை கொடுத்து வாங்கிய விதைப் பண்ணைகளை இனியாவது செம்மைப்படுத்தி, அதை ஒரு எகனமிக் யூனிட்டாக இயங்கும்படி பெரிது படுத்தி, செம்மையாக விவசாயம் நடத்தி அதிலிருந்து கிடைக்கக்கூடிய பொறுக்கு விதைகளை இந்தெந்தப் பகுதிகளுக்கு, இந்தெந்த பிளாக்குகளுக்கு கொடுக்கிறோம் என்று பிரித்து கொடுக்கக்கூடிய பழக்கம் இருக்க வேண்டும். அந்த முறையிலே விதைப் பண்ணைகள் இயங்கி வந்தால் மக்களுக்கு பயன்படும். இல்லாத முறையிலே, ஒவ்வொரு விதைப்பண்ணையிலும் என்னென்ன உற்பத்தி செய்யப் படுகிறது, எங்கு விநியோகிக்கப்படுகிறது என்று நேரிடையாக மக்களுக்கு தெரிவதில்லை. அந்தந்த மாவட்டத்திற்குத் தேவையான விதைகள் அந்தந்த விவசாயிகளுக்கு கிடைக்கக்கூடிய முறையிலே அந்த விதைப்பண்ணைகள் இயங்கவேண்டும். அந்தந்த மாவட்டத்திற்கு எது தேவையோ அந்த விதைகளை அதற்கு முந்திய அறுவடை காலத்திலேயே அந்தந்த விதைப் பண்ணைகளில் தயார் செய்யவேண்டுமென்று நான் கோருகிறேன்.

அடுத்தபடியாக, சிறு தொழில்களைப் பற்றி பேச விரும்புகிறேன். கூட்டுறவு முறையில் சிறு தொழில்களை நடத்துவது ஒரு வினையாக முடிகிறது. உதாரணமாக மண்பாண்டங்கள் செய்யும் தொழிலை கூட்டுறவு முறையில் அமைக்கவேண்டும் என்பதற்காக நாங்கள் பல இடங்களில் சென்று கூட்டுறவு சங்கங்களை சேர்த்தோம். அம்மாதிரி சேர்த்தது இப்பொழுது ஒரு பெரிய வினையாக வந்திருக்கிறது. இந்தக் கூட்டுறவு பண்டகசாலையிலிருந்து ஒரு சட்டிபானை விற்கவேண்டுமென்றால் அதற்கு ஒரு அணா விற்பனை வரி கொடுக்கவேண்டும். ஆனால், கூட்டுறவு சங்கத்தில் சேராமல், தனியாக ஒருவர் சட்டிபானை வேய்ந்து விற்றால் அவர் 12 அணாவுக்கு விற்கலாம். ஆனால் கூட்டுறவு பண்டகசாலையில் செய்த சட்டிபானையை விற்கவேண்டுமென்றால், ஒரு அணா கூட போட்டு 13 அணாவுக்குத் தான் விற்கவேண்டும். இம்மாதிரி நிலை இருந்தால், கூட்டுறவு முறை எப்படி நிலைக்கும் என்று கேட்கிறேன். சிறு குடிசைத் தொழில்கள் அத்தனைக்கும் விற்பனை வரி

23rd January 1961] [Sri K. Sattanatha Karayalar]

இருப்பது மிகப் பெரிய சாபக் கேடாக இருக்கிறது. தெரியாமல் சில கூட்டுறவு சங்கங்கள் விற்பனை வரியில்லாமல் குறைந்த விலைக்கு விற்றிருக்கின்றன. அவைகளுக்கு மொத்த 'டர்ன் ஓவர்' இவ்வளவு ஆகியிருக்கிறது. ஆகையால் இவ்வளவு ரூபாய் கட்ட வேண்டும், ரூ. 1,300 கட்ட வேண்டும், என்றெல்லாம் நோடீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனால் பல கூட்டுறவு பண்டக சாலைகள் மூடவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டது. கண்டிப்பாக சிறு தொழில்கள் செய்யக்கூடிய கூட்டுறவு பண்டகசாலைகளுக்கெல்லாம் விற்பனை வரியிலிருந்து விதிவிலக்கு கொடுக்க வேண்டும் என்று நான் மிகவும் பணிவன்போடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒன்றிரண்டு நடக்கக் கூடிய திட்டங்கள் எப்படி நடக்கின்றன என்பதைப்பற்றி மட்டும் குறிப்பிட்டுவிட்டு நான் முடித்துக் கொள்ளுகிறேன். மந்திரி அவர்களுக்கும் தெரியும். மாராமத்து இலாகா பாலம், செங்கோட்டை, தென் காசி இரண்டு பகுதிகளையும் இணைக்கக்கூடிய பாலம், ராஜ்ய புனரமைப்புக்கு முன்பே திருவாங்கூர் கவர்ன்மெண்டால் ஆரம்பிக்கப்பட்ட பாலம் 'டெக் லெவல்' என்று சொல்லக்கூடிய ரோடு மட்டத்திற்கு கட்டிவிடப்பட்ட பாலம் இன்னும் கட்டி முடிக்கப்படவில்லை. இம்மாதிரி காலதாமதம் ஆகிறது. அதேமாதிரி இன்னொரு மிகச் சிறிய பாலம், ஒரு லட்ச ரூபாய் செலவில் கட்டவேண்டிய பாலம் இன்று வரை கட்டி முடிக்கப்படவில்லை. மூன்று ஆண்டுகளாக திரும்பித் திரும்பி அதுபற்றி கூறிக்கொண்டே இருக்கிறேன். அந்தப் பாலம் கட்டி முடிக்கப்படாமலேயே திரிசங்கு சொர்க்கத்தில் விடப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக, தென்காசியில் 40 லட்சம் ரூபாய் செலவில் ஒரு குடி தண்ணீர் திட்டம் இன்னும் அமுலாக்கப்படாமல் காலம் தாழ்த்தப்படுகிறது. முதல் ஐந்தாண்டு திட்ட காலத்திலேயே கனம் முதல் மந்திரி அவர்கள் அதற்கு அடிக்கால் நாட்டினார்கள். ஆனால், இன்றுவரை எந்த இடத்திலிருந்து தண்ணீர் எடுப்பது என்பது யாருக்கும் தெரியாது. இப்பொழுது 'காபினட்' அப்ரூவலுக்கு' பேப்பர்ஸ் போயிருக்கிறது என்று அறிகிறேன். முடிவு என்னவென்று தெரியாது. தண்ணீர் எங்கிருந்து எடுக்கவேண்டுமென்பது யாருக்கும் தெரியவில்லை. டாங்கு கட்டிவிட்டார்கள். ஆங்காங்கு குழாய்களும் அமைக்கப்பட்டு விட்டன. ஜனங்கள் எப்பொழுது தண்ணீர் வரும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து தண்ணீர் எடுத்தால் யாராவது தங்களை பாதிக்கும் என்றால் இங்கு வந்து கேட்டவுடன், ஒரு 'ஸ்டே ஆர்டர்' கொடுத்து விடுகிறார்கள். ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்தவர்கள் தங்கள் வயல்களை பாதிக்கும் என்று கேட்டால், உடனே 'ஸ்டே ஆர்டர்' கொடுத்துவிடுகிறார்கள். ஏதாவது ஒரு இடத்தில் தண்ணீர் எடுத்தால், யாராவது ஒருவருடைய வயலை அது பாதிக்கத்தான் செய்யும். குடி தண்ணீருக்கு முக்கியத்துவம் கொடுத்து, நிலங்களை ஆர்ஜிதம் செய்ய

[Sri K. Sattanatha Karayalar] [23rd January 1961

வேண்டுமென்றால், 'அக்விசிஷன் ப்ரொசிடிங்ஸ்' எடுத்துக் கொள்ள வேண்டும். அப்படியில்லை என்று கேட்பவர்களுக்கு எல்லாம் 'ஸ்டே ஆர்டர்' கொடுத்தால், இம்மாதிரி இந்த முக்கிய மான குடி தண்ணீர் திட்டம் 9 ஆண்டுகளாக காலம் தாழ்த்தப் பட்ட திட்டம்; மேலும் காலம் தாழ்த்திக்கொண்டே போகப்படும். போட்ட திட்டத்தை உறுதியாக நின்று துரிதமாக நிறைவேற்றி வைக்கவேண்டும். ஆட்சியில் இருப்பவர்கள் திட்டம் தீட்டியபடி அந்தத் திட்டங்களை பாராபட்சமற்ற முறையிலே, கட்சி மனப் பான்மை இல்லாமல், தங்கள் நண்பர்கள் பற்று, ஜாதிப் பற்று இல்லாமல் நிறைவேற்றுவதற்கு நியாயமாகவும், நேர்மையாகவும் செயலாற்றவேண்டும். அது இல்லாத காரணத்தினால் நான் மிகவும் வருந்துகிறேன்.

**Sri M. KANDASAMI PADAYACHI** : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, நமது மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் ஆற்றிய உரையை வரவேற்று, சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். நமது தேசத்தை ஆண்டு வந்த வெள்ளையர் நம்மிடத்தில் ஆட்சியை ஒப்புடைத்து 13 வருஷங்கள் ஆகின்றன. மகாத்மா காந்தி அடிகள் காட்டிய வழிகளை பின்பற்றி நம் தேசம் நல்ல முறையில் முன்னேறி வருகின்றது. இப்பொழுது மாட்சிமை தங்கிய ராணியார் எலிசபெத் அவர்கள் நம் நாட்டிற்கு விஜயம் செய்வதை நாம் வரவேற்கிறோம். அது நமக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. ராணியார் அவர்களுக்கு நல்ல வர வேற்பு கொடுக்க வேண்டியது அவசியம்தான். நமது கவர்னர் பெருமான் முறைப்படி அவருக்கு முதலில் நல்வரவு கூறியிருக் கிறார். முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடி வடைந்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு இப் பொழுது ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். முதல் இரண்டு திட்டங்களில் நிறைவேற்றப் படாமல் விட்டுப் போன திட்டங்களை இந்த மூன்றாவது திட்டத்தில் எடுத்து நிறைவேற்ற நமது ராஜ்ய சர்க்கார் முயற்சி எடுத்துக்கொண்டிருக் கிறார்கள். அதற்காக நமக்கு மத்திய சர்க்கார் 190 கோடி ரூபாய் உதவி அளிக்க இருக்கிறது. இது வரவேற்கத்தக்கது. காலா காலத்தில் மழை பெய்யாமல் காலம் தவறி மழை பெய்ததால் குறிப்பாக தென் ஆற்காடு மாவட்டத்தில் உடைப்பு ஏற்பட்டு அநேக சாலைகளுக்கு சேதம் ஏற்பட்டு, அவைகள் பழுதடைந்திருக்கின்றன. பயிர்களும் சேதமடைந்துள்ளன. நாற்றுகளையெல்லாம் திரும்ப நடவேண்டிய நிலை ஏற் பட்டுவிட்டது. அதனாலே விவசாயிகள் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். விவசாயத்திற்கு முதலிடம் கொடுக்க வேண்டும் என்பதுதான் நமது முக்கிய திட்டம். தற் போதைய உற்பத்தி சுமார் 52 லட்சம் டன் என்றும், இன்னும் 15 லட்சம் டன் அளவு அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமென்று கவர்னர் உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்க மிகவும் சந்தோஷம். விவசாயிகளுக்கு வேண்டிய உரங்கள், கருவிகள் இவைகளை அரசாங்கம் சரியான முறையிலே விநி

23rd January 1961] [Sri M. Kandasami Padayachi]

யோகிக்க வேண்டும். என்னுடைய வட்டாரத்திலுள்ள முக்கியமான இடங்களிலே விதைகள், உரங்கள், சரியான முறையிலே கொடுக்கப்படுவதில்லை என்றுதான் அங்கேயுள்ளவர்கள் கருதுகிறார்கள். எதிர்க்கட்சி நண்பர் சொன்னமாதிரி, ஒரு வட்டாரத்திற்கு எவ்வளவு தேவையோ, அதை ஸ்டாக் செய்து, வட்டார வளர்ச்சி அதிகாரியின் வரம்புக்கு உட்பட்டு, அதைப் பங்கிட உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். காலாகாலத்தில் உரங்கள் சரியான முறையிலே பங்கிடப்படவில்லை என்ற குறை இருந்து வருகிறது. வட்டார வளர்ச்சி அதிகாரியோடு சட்டசபை உறுப்பினர்களேயும், இன்னும் விவசாய மக்களேயும் சேர்த்துக்கொண்டு, பங்கீடு செய்வார்களேயானால் நல்ல முறையில் பயன்படும். உற்பத்தி பெருக வசதி ஏற்படும்.

மின்சார அபிவிருத்திக்கு 101 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். பல அணைக்கட்டுத் திட்டங்களினாலே முன் பகுதியிலுள்ள நிலங்கள் பாசன வசதி பெறுகின்றன. பின் பகுதியிலுள்ள நிலங்களுக்கு கிணறுகள் வெட்டி, வேண்டிய பம்பு செட்டுகள் வைப்பதற்கு மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும். பிற்போக்கான இடங்களிலே விவசாயிகளுக்கு பம்பு செட்டுகளுக்குக்கூட மின்சார வசதியில்லாமல் இருக்கிறது. எந்தெந்தப் பகுதிகள் பிற்போக்காக இருக்கின்றனவோ அங்கேயெல்லாம் முன் பாத்தியத்தை கொடுத்து, மின்சாரத்தை உபயோகப்படுத்தும்படியான திட்டத்தை மேற்கொள்ள வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். கிணறுகள் வெட்டி 3 அல்லது 4 வருஷங்கள் ஆகியும், குறைந்தப்பட்சக் கட்டணம் 10 சதவிகிதம் வரவில்லையென்ற காரணத்தினாலே பல பகுதிகள் மின்சார வசதியில்லாமல் பின்தங்கிய நிலையில் இருக்கின்றன. ஆகவே விவசாயத்திற்கு முதலிடம் கொடுத்து, பம்பு செட்டுகளுக்கு வேண்டிய மின்சாரத்தைக் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தொழில் துறையை எடுத்துக்கொண்டால், எங்கள் மாவட்டத்திலுள்ள நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி உற்பத்தியாகிறது. சேலத்திலே இரும்பு உருக்குத் தொழிற்சாலையை அமைக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. எங்கள் ஊரிலே விமான நிலையம் ஒன்று அமைந்துள்ளது. அயல் நாட்டு நிபுணர்கள் அங்கே வந்து இறங்கினால், பக்கத்திலே உள்ள நெய்வேலிவேலிக்குப் போவதற்கு சௌகரியமாக இருக்கும். அங்கிருந்து 8 மைல் தூரத்திலேதான் இருக்கிறது. இப்பொழுது அது காலியாகக் கிடக்கிறது. அங்கே ஒரு பெரிய தொழிற்சாலையை ஏற்படுத்த வேண்டிய வசதி இருக்கிறது. விமான நிலையத்தை சீர்படுத்தினால் வெளிநாட்டு நிபுணர்கள் வருவதற்குச் சௌகரியமாக இருக்கும். அதே இடத்தில் ஒரு பெரிய தொழிற்சாலையையும் அமைக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீர்ப்பாசன வசதியை எடுத்துக்கொண்டால், நண்பர் சுவாமிக்கண்ணுப் படையாச்சி சொன்னது போல் பெண்ணையாறுத் திட்டத்தை செங்கல்பட்டு, தென் ஆற்காடு

மாவட்டங்களுக்குக் கொண்டுவந்தால் நல்ல திட்டமாக இருக்கும். குடி தண்ணீருக்கு மட்டுமல்லாமல், நீர்ப்பாசனத்திற்கும் பயன் படும். சாத்தனூர் அணைக்கட்டிலேயிருந்து தென்புறமாக சங்கரா புரம் வழியாகக் கால்வாயை வெட்டிக் கொண்டுவரவேண்டு மென்று கனம் மராமத்து அமைச்சர் அவர்களிடம் சொல்லியிருக் கிறோம். அந்தத் திட்டம் நிறைவேறினால், கள்ளக்குறிச்சி, உளுந்தூர்பேட்டை போன்ற மேட்டுப்பாங்கான இடங்களுக்கும் பாசன வசதி ஏற்படும்.

பொதுக் கல்வியைப் பொறுத்தவரையில் 6 முதல் 11 வயது உள்ள சிறுவர்களுக்கு கட்டாயக் கல்வி அளிக்கப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. சில உயர்தரப் பள்ளிகளில் நல்ல முறை யில் பயிற்சி அளிக்கப்படவில்லை. ஆகவே எல்லாப் பள்ளிகளிலும் கட்டாயக் கல்வி முறையைப் புகுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சுகாதாரத்தைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு பிளாக்கிலும் ஒரு பிரைமரி ஹெல்த் சென்டர் இருக்கிறது. சில டவுன்களிலும், பஞ்சாயத்துகளிலும் ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன. பஞ்சாயத்து யூனியனிடம் ஒப்படைத்துப் பராமரிக்கவேண்டுமென்ற திட்டம் இருக்கிறது. எப்படி உயர்நிலைப் பள்ளிகளை சர்க்கார் எடுத்து நடத்த உத்தேசித்திருக்கிறார்களோ, அதேமாதிரி ஆஸ்பத் திரிகளையும் எடுத்து நடத்தினால் நல்லது. மக்களுக்கு உதவியாக இருக்கும். பிரைமரி ஹெல்த் சென்டர்கள் கிராமங்களில் பணி புரி கின்றன. டவுன்களிலே ஆஸ்பத்திரிகள் இருப்பதனால், அர சாங்கம் அவற்றை எடுத்து நடத்தினால்தான் மக்களுக்குப் பயன் ஏற்படும்.

மூன்றாவது திட்டத்திலே நல்ல நல்ல திட்டங்கள் சேர்க்கப்பட் டிருப்பதுபற்றி மகிழ்ச்சியடைகிறோம். எதிர்க் கட்சி அங்கத் தினர்கள் திட்டத்தைப்பற்றி குறை கூறுகிறார்கள். இதை எதிர்த்துப் பெரிய கிளர்ச்சி செய்யப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். நல்ல திட்டங்களை நிறைவேற்று வதற்கு வரி வேண்டுமானாலும் கொடுக்க மக்கள் தயாராய் இருக்கிறார்கள். மக்களை அதிகம் பாதிக் காமல் எந்த அளவுக்கு வரி வசூலிக்க முடியுமோ, அந்த அளவுக்கு வரி வசூலிக்க தகுந்த ஏற்பாடுகள் செய்யவேண்டும். அரசாங்கத்துடன் ஒத்துழைத்தால்தான் மக்களுக்கு வேண்டிய பல திட்டங்களை நிறைவேற்ற முடியும். ஆகவே, இம்மாதிரி நல்ல திட்டங்களை எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் எதிர்ப்பதை விட்டு விட்டு, அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இந்த சந்தர்ப்பம் கொடுத்ததற்கு சபாநாயகருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

1 p.m.

**Sri T. L. SASIVARNA THEVAR :** கனம் உதவி சபாநாயகர் களே, நம் மாநில கவர்னர் பெருமான் ஆற்றிய உரையின்மீது, என் கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இங்கே பேசிய பல கனம் அங்கத்தினர்கள், பொதுவாகக் குறிப்பிட்ட ஒரே ஒரு

23rd January 1961] [Sri T. L. Sasivarna Thevar]

விஷயம், விலைவாசி ஏற்றத்தைப்பற்றி. அதைப்பற்றி அபிப்பிராய பேதம் இல்லாமல், அக்கரையோடு பேசினார்கள். அதையே நானும் சொல்ல விரும்புகிறேன்.

அது சமுதாயத்தில் உள்ள ஒரு பெரிய குறை. ஆளும் கட்சி அங்கத்தினர்களும், கவர்னர் பெருமான் உரையை வரவேற்கிறோம் என்று சொல்லி விட்டு குற்றந்தான் கூறுகிறார்கள்; எதிர்க்கட்சி அங்கத்தினர்களும், கவர்னர் பெருமான் உரையை எதிர்க்கிறோம் என்று சொல்லி அதே குற்றங்களைச் சொல்கிறோம். ஆரம்பத்தில் தான் வித்தியாசம் என்று, சபாநாயகர் அவர்களே, அறிவிக்க விரும்புகிறேன். விலைவாசி ஏற்றத்தால் மக்கள் படும் துன்பம் கொஞ்சநஞ்சமல்ல. இன்று 13 ஆண்டுகள் காங்கிரஸ் ஆட்சி இருந்து வந்திருக்கிறது. இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டாகி விட்டது. இந்த சந்தர்ப்பத்திலும் எந்த விளை பொருளாவது விலைகுறைந்திருக்கிறதா என்றால், நிச்சயமாக இல்லை. அத்யாவசியப் பொருளாவது குறைந்திருக்கிறதா, மற்றதைப்பற்றிக் கவலை இல்லை. விலை குறைந்திருக்கிறதா, அல்லது நியாயமான விலைக்காவது கிடைக்கிறதா என்றால், இல்லை என்பதில் அபிப்பிராய பேதம் இல்லை. அதைப்பற்றி, விலைவாசியைக் குறைக்க என்ன நடவடிக்கை அரசாங்கம் எடுக்கப் போகிறது என்று கவர்னர் பெருமான் உரையில் ஒன்றும் கிடையாது. விலைவாசிகள் குறைய ஆரம்பித்திருக்கின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நான் மதுரையிலிருந்து வருகிறேன். சமீபத்தில் அறுவடை முடிந்த சமயம்; அங்கு மூட்டை நெல் கார் நெல்லைவிட அதிகமான விலைக்கு விற்கிறது. அறுவடை காலத்திலும் மூட்டை ஒன்று ரூ. 30-க்குக் குறையவில்லை. அம்மாதிரியே தான் மற்றுமுள்ள தானியங்களும். புஞ்சைப் பயிரும் அப்படித்தான். மழை பெய்தது வாஸ்தவம். ஆனால் அது காலம் தாழ்த்திப் பெய்தது. அதனால் புஞ்சைப் பயிர்கள் கெட்டு விட்டது என்பதை மறக்கக்கூடாது. ஆனால், நஞ்சை நல்ல முறையிலே இருக்கிறது, இனிமேலும் நல்ல முறையில் இருக்கலாம். ஆனால் புஞ்சைப் பயிருக்கு இது நெருக்கடியான காலம். இனிமேலும், நெருக்கடியாகத்தான் இருக்கும் என்பதை மட்டும் மறந்து விடக்கூடாது. ஆகவே, அதைத் தவிர்க்க வேண்டிய நடவடிக்கைகள் எடுத்தாகவேண்டும். புளி, மிளகாய் எல்லாம் சகிக்கமுடியாதபடி விலை ஏறிக்கிடக்கிறது. நல்லண்ணெய் ஒரு படிக்கு ரூபாய் ஐந்து அல்லது ஆறு கொடுக்கவேண்டி இருக்கிறது. அதேமாதிரி எந்தப் பொருளை எடுத்துக்கொண்டாலும் இதற்கெல்லாம் பணவீக்கம் காரணம் என்று சொல்லலாம். வருமானம் நிறைய வருபவர்களுக்குப் பரவாயில்லை. ஆனால், நிர்ணயிக்கப்பட்ட வருமானம் உள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், மில் தொழிலாளிகள் முதலியவர்கள் இம்மாதிரி விஷம் கட்டினாற்போல் விலைகள் ஏறிக்கொண்டு போனால் எப்படிச் சமாளிக்க முடியும் என்பதைச் சற்று சிந்திக்க வேண்டும். விறகை எடுத்துக் கொள்ளுங்கள், இரண்டே முக்கால் ரூபாய்க்குகூட ஒரு ரூண்டு

[Sri T. L. Sasivarna Thevar] [23rd January 1961

விறகு கிடைக்கவில்லை மதுரையில். இம்மாதிரி ஏறிக்கொண்டே போகும் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டிய நடவடிக்கைகள் எடுக்காவிட்டால், ஆபத்துக் காத்துக் கொண்டிருக்கிறது பின்னால் என்பதை மட்டும் சொல்ல விரும்புகிறேன்.

விவசாயத்திற்கு பெரும் அளவு கவனம் செலுத்தப் படுகிறது என்று சொல்கிறார்கள். இதிலே, தகராறு என்னவென்றால், உரம் பற்றாக்குறை. அதைச் சொல்லி முடியாது. சென்ற வருஷத்தைக் காட்டிலும், இந்த வருஷம் கஷ்டம் சொல்ல முடியாதபடி அதிக மாகி விட்டது. உரமே கிடைக்கவில்லை என்றுகூட சொல்லி விட லாம், அவ்வளவு கஷ்டம், நஷ்டம். கோவாபெரேடிவ் முறையிலே விநியோகிக்கிறோம் என்கிறார்கள். மதுரையில் கோவாபெரேடிவ் ஸ்டோர்களிலே உரம் வாங்குவது என்பது குதிரைக் கொம்பாகி விட்டிருக்கிறது. ஆனாலும், கீழ் மாசி வீதியில் உள்ள ஒரு கடை யில் மாத்திரம் 2,000, 3,000 மூட்டைகளை பகிரங்கமாக மூட்டை ஒன்று ரூ. 100 வரை விலை போட்டு விற்கிறார்கள். அதைக் கண்ணால் பார்க்கிறோம். எங்கிருந்து வருகிறது என்று தெரிய வில்லை. லாரி, லாரியாக வருகிறது. இந்த லாரி எங்கிருந்து வருகிறது என்று கேட்டால், கோயம்புத்தூரிலிருந்து என்கிறார்; அந்த லாரி எங்கிருந்து வருகிறது என்றால், திருநெல்வேலி யிலிருந்து என்கிறார். எந்த சொசைடி மூலமாகவோ, அதிக விலை கொடுத்து வாங்கியோ என்னவோ என்று சந்தேகப்பட வேண்டி யிருக்கிறது. இதையெல்லாம் சர்க்கார் கவனிக்க வேண்டும். இதை மனப் பூர்வமாக, தாழ்மையோடு தெரிவிக்கிறேன்.

நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க என்று மூன்றாவது திட்டத் தில் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பரம்பிக்குள திட்டம் நிறை வேற்றப்படும் என்று தெரிகிறது. ஆனால் இதே சமயத்தில், கிழக்கு இராமநாதபுரம் பற்றி ஒரு சில வார்த்தைகள். கிழக்கு இராமநாதபுரம் ரொம்பப் பிற்போக்கான பிரதேசம். அதற்கு ஒரு நீர்பாசனத் திட்டம் வேண்டும் என்று நாலு வருஷ காலமாக கத்தாமல் கத்துகிறோம். காங்கிரஸ் அங்கத்தினர்களும் சரி, மற்ற எதிர்க்கட்சி அங்கத்தினர்களும் சரி, பல அங்கத் தினர்கள் கத்திக்கொண்டே இருந்திருக்கிறார்கள். சென்ற தடவை நீர்ப்பாசன சம்பந்தமான மானியத்தின் பேரில் பேசும் போதும் நான் குறிப்பிட்டேன், அப்பொழுது கனம் மராமத்து மந்திரியவர்கள் அப்பர் பெரியாறு திட்டம் சம்பந்தமாகவும் எவ்வளவு உதவிகள் செய்ய வேண்டுமோ அவ்வளவு செய்கிறோம் என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள். சோனல் கவுன்சில் கூட்டத்தில் அதைப் பரிசீலனை செய்கிறோம் என்றும் சொன்னார் கள். அவர்கள் அப்படிச் சொன்ன இரண்டொரு மாதங்களுக்குப் பிறகு, நம் லைப்ரெரியில், சோனல் கவுன்சில் அஜெண்டாவையும் அந்தக் கூட்டத்து மினிட்ஸையும் பார்த்ததில், முதல் இடமாக சிறுவாணித் தண்ணீரை கோவை நகரத்திற்கும் விவசாயத் திற்கும் உபயோகிப்பது பற்றி அஜெண்டாவில் இருந்ததே தவிர, அப்பர் பெரியாறு திட்டம் அஜெண்டாவில்கூட இடம் பெற்றிருக்க வில்லை. அமைச்சரவர்கள் இங்கே இருப்பதால் இதைச் சொல்லு

23rd January 1961] [Sri T. L. Sasivarna Thevar]

கிறேன். ஆகவே, கிழக்கு ராமநாதபுரத்திற்கு பரிபூரணமாக நன்மை பயக்கும் திட்டம் காலதாமதம் செய்யப் படுகிறது. தண்ணீர் தகராறு என்றால், கேரளா சர்க்காரோடு தகராறு என்றால், கேரளா முதல் அமைச்சர் ஒரு துளித் தண்ணீர்கூட கொடுக்க மாட்டேன் என்று சொல்கிறார் என்றால், அம்மாதிரித் தகராறுகள் அப்பர் பெரியாறு திட்டத்தில் இருக்கவில்லை. அதற்குக் காரணங்களும் இல்லை. அப்பர் பெரியாறு திட்டம் முக்கியமாக மின்சாரத் திட்டம். அந்த மின்சாரம் கேரளாவுக்கு வேண்டும். அது அவர்களுக்குக் கிடைக்கிறது. அதில் உப யோகப்படுத்தப்பட்ட தண்ணீர், நமக்குக் கிடைக்கிறது தண்ணீர் கேரளாவுக்கு அவசியம் இல்லை. இந்த திட்டத்தை ஏன் மூன்றாவது திட்டத்தில் சேர்க்கவில்லை என்று தெரியவில்லை. கேரளா சர்க்காரை அணுகி—கேரளா சர்க்காருக்கு நிறைய மின் சாரப் பசி இருக்கிறது—பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களுக்கு வேண்டிய மின் சாரம் கிடைக்கிறது, நமக்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கிறது. எந்தக் காரணத்திற்காகவோ இது தள்ளிப் போய் விட்டது. அது சரியில்லையென்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். கிழக்கு ராமநாதபுரம் மக்கள் ஏமாற்றம் அடைந்திருக்கிறார்கள். இதற் காக ஒரு சிறிய சத்தியாக்கிரக போராட்டமேகூட செய்யத் தயாராக இருக்கிறோம் என்று என் தொகுதி மக்கள் சார்பாக கூறிக்கொள்ளுகிறேன். காலம் தாழ்ந்து விடவில்லை. இன்றைய தினம் தமிழகத்திலே, பிற்போக்கான பகுதி கிழக்கு ராமநாதபுரம், அந்தப் பகுதி நல்லமுறையிலே வாழ வேண்டும் என்று அந்த திட்டத்தை நிச்சயமாக மூன்றாவது திட்டத்தில் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதிர்ஷ்டவசமாக இங்கு மராமத்து இலாகா அமைச்சரவர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சோஷலிச பாணி முறை எங்களது என்று சொல்லி, அதற்கு எல்லாம் கூட்டுறவு முறைதான் என்று சொல்லி திட்டம் வகுத்திருக்கிறார்கள். அந்தக்கூட்டுறவு முறையைப்பற்றி பலபேர் பல அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால், அதற்கென்று புதிதாக ஒன்றும் சட்டம் கிடையாது பழைய சட்டமே தான். காம்ப்ரிஹென்சிவ், சர்வாங்கச் சட்டம் கொண்டு வரப் போகிறோம் என்கிறார்கள். ஆனால், இரண்டு வருஷ காலமாகப் பார்க்கிறோம், கோவா பெரேடிவ் முறையின் பரிபூரண தோல்வியை. முன்பெல்லாம் குற்றம், குறை திருட்டுச் செய்தவர்கள் ஜெயிலில் இருப்பார்கள். ஆனால், இப்பொழுது, ஒரு கூட்டுறவு சங்கத் தலைவர் அல்லது அந்த செக்ரடிரி இம்மாதிரி ஜெயிலுக்குப் போய் விடுகிறார்கள். ஆனால், நான் கூட்டுறவு தத்துவத்தைக் குறைக்கூறவில்லை. அதில் ஈடுபட்டிருப்பவர்கள் தவறு செய்கிறார்கள். அவர்களும், தவறு செய்வதற்கு முன்னால் இல்லை, தவறு செய்ததன் பிறகு காங்கிரஸ் காரனாக மாறுகிறார், கதர் அணிகிறார், மந்திரியோடு போகிறார், மாலை அணிகிறார். சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்

[Sri T. L. Sasivarna Thevar] [23rd January 1961]

கிறார்களா என்றால், ஏதோ நடவடிக்கை என்று ஆரம்பிக்கிறார்கள், பின்னால் ஒன்றும் இல்லை. கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆன மாதிரியாக, ஒரு நடவடிக்கையும் இல்லாமல் போகிறது. ஆகவே, கூட்டுறவு இயக்கம் வளர்ச்சியடைய வேண்டுமானால், கண்காணிப்பும் உறுதியான சட்டங்களும் இருக்க வேண்டும்; இல்லையானால், அதற்குள் சம்பந்தப்பட்டவர்கள் பணத்தை 'ஸ்வாஹா' பண்ணிவிட்டு ஜெயிலுக்குப் போய் விடுவார்கள். இதனால் கூட்டுறவு தத்துவமே கெட்டுவிடும் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

நம்முடைய மாநிலத்தில் சர்வகலாசாலையொன்று வரப் போவதாகக் கேள்விப்படுகிறேன். அதற்கு ஒரு தகுதியான இடம் மதுரை மாநகரம்தான். அதற்குச் சரித்திரம் இருக்கிறது—நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் எப்படியாவது கோயம்புத்தூருக்கு அதைத் தட்டிக்கொண்டு போய்விடுவாரோ என்ற சந்தேகம் இருக்கிறது—இதற்கு மதுரைதான் பொருத்தமான நகரம். சென்ற காலத்தில், தமிழ்நாட்டு மூவேந்தர்கள் காலத்தில் தமிழ்ச் சங்கம் இருந்த இடம் மதுரை. ஆகவே, எவ்விதமான ஆட்சேபணையும் இல்லாதபடி, எவ்வித தகராறும் இல்லாத நிலையில் மதுரையில் ஒரு சர்வகலாசாலையை நிறுவ வேண்டிய வேலையைச் சர்க்கார் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஒரு பெரிய பிரச்னை இருக்கிறது. 30-ந் தேதி ஒரு இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதாக தலைவர் ஒருவர் எச்சரிக்கை செய்திருக்கிறார்கள். இந்த ராஜ்யத்திற்குத் 'தமிழ் நாடு என்று பெயர் வைப்பதில் என்ன கஷ்டம் இருக்கும் என்பது எனக்கு விளங்கவில்லை. மொழிவாரியாக மாகாணங்கள் பிரிக்கப்பட்டபோது எல்லா மாகாணங்களுக்கும் மொழி சம்பந்தப்பட்ட பெயர் இருக்கும்போது, நமக்கு மட்டும் ஏன் இல்லாமல் இருக்க வேண்டும்? எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்கிறார்களே, அதை நாம் எப்படி ஏற்றுக்கொள்வது என்ற வீம்பு அரசாங்கத்திற்கு இருக்கத் தேவையில்லை. ஜமீன் ஒழிக்கப்படவேண்டுமென்று எதிர்க் கட்சிக்காரர் சொன்னபோது, அதை ஏற்றுக்கொண்டு நிறைவேற்றவில்லையா அரசாங்கம்? குறைகளையும், செய்ய வேண்டியவைகளையும் சொல்வது இடது சாரிக் கட்சிகளின் பொறுப்பு. அவைகளை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு அரசாங்கக் கட்சியைச் சார்ந்தது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அந்த வகையில் நம்முடைய மாநிலத்திற்குச் சிறந்த முறையில் 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்க எதற்காக அரசாங்கம் பயந்துகொண்டிருக்க வேண்டும். ஜனநாயகம் என்றால் அபிப்பிராயபேதம் இருக்கும். அதைக் கேட்கத்தான் வேண்டும். எதிர்க் கட்சிகள் சொல்வதைக் கேட்க மாட்டோம் என்று சொல்வது சர்வாதிகாரமாகும். நாளைய தினமே சர்க்கார் நம்முடைய ராஜ்யத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர் வைப்பார்களேயானால், எதிர்க்கட்சியினர் சப்தம் போடாமல் வாயடைத்துப் போய்விடுவர். இதில் கட்சிப் பாகுபாடு தேவையில்லை.

23rd January 1961] [Sri T. L. Sasivarna Thevar]

காங்கிரஸ் கட்சி, எதிர்க் கட்சி என்று பாராபட்சம் வேண்டா மென்று கேட்டுக்கொள்கிறேன். நாளைய தினமே 'தமிழ்நாடு' என்று பெயர் வைப்பதாக முடிவு கூற வேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன்.

எதிர்த் தரப்பிலிருந்து பேசக் கூடியவர்கள் சர்க்கார்த் தலை யீடுகளைக் குறிப்பிட்டுப் பேசினார்கள். அம்மாதிரி பேசும்போது ஆளும் கட்சியிலிருந்து பல கடுமையான தாக்குதல்கள் வந்தன. ஒரு அன்பர், காட்டுக்குப் போகச் சொல்கிறார். அது அவசியம் இல்லை. நாட்டில் வாழத்தான் நீங்கள் ஆட்சி செய்கிறீர்கள். அந்தக் கனம் அங்கத்தினர் கடுமையாகச் சொல்ல வேண்டிய அவசியம் எற்பட்டதைக் கண்டு வருந்துகிறேன்.

காங்கிரஸ்காரர் யாராவது அணுகிச் சொன்னால்தான் செய்ய வேண்டும், எதிர்க்கட்சிக்காரர் அணுகினால் செய்யக்கூடாது என்ற உணர்ச்சி உத்தியோகஸ்தர் மத்தியில், தமிழ்நாடு பூராவும், பரவியிருக்கிறது; காங்கிரஸ்காரர் அநியாயமாகச் சொன்னாலும் கேட்கவேண்டும், காங்கிரசல்லாதவர் நியாயமாகச் சொன்னாலும் கேட்கக்கூடாது என்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். உதார ணங்கள் சொல்லிக் கொண்டிருக்கலாம். எண்ணற்ற உதார ரணங்கள் கைவசம் இருக்கின்றன. பூராவும் சொல்லிக்கொண்டி ருக்க விருப்பம் இல்லை.

தேர்தல் வருகிறது. அந்தக் காலத்திலாவது முடிந்த அளவு நியாய பூர்வமாகத் தேர்தலை நடத்த லாயக்காக இருக்கவேண்டு மென்று நான் கேட்டுக் கொள்கின்றேன். முக்கியமான கோரிக்கை யைச் சொல்கிறேன். அதாவது, தேர்தலுக்கு ஆறு மாதங் களுக்கு முன்னால் ஆட்சியிலுள்ளவர்கள் அதிகாரத்தைவிட்டு வெளியே வந்துவிடவேண்டும். தேர்தலில் ஜெயித்து மீண்டும் ஆட்சிக்கு வருவோமா இல்லையா என்று ஆளும் கட்சியினர் பயப் படவேண்டாம். நம்முடைய ஜனங்களின் பேரில் நம்பிக்கை இருக்கும் பட்சத்தில் தைரியமாக அம்மாதிரி செய்யட்டும். அதனால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது. ஆட்சி யாளர் பேரில் எங்களுக்குச் சந்தேகம் இருக்கிறது. பல உபதேர்தல்களில் ஆட்சியாளர்கள் தங்களுடைய அரசாங்க அதிகாரத்தை உபயோகப்படுத்தி வோட்டு வாங்கியதற்குத் தக்க ஆதாரம் இருக்கிறது. அந்த சந்தேகத்தால்தான் கேட்கிறோமே யொழிய வேறு ஒன்றுமில்லை. ஒரு முக்கிய மான கோரிக்கை, நல்ல கோரிக்கை. அதைச் செய்ய வேண்டிய பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். பொறுப்புள்ள, நம்பிக்கையுள்ள நமது மாநில சர்க்கார் உடனே மத்திய சர்க்காருக்கு இதைப்பற்றித் தகவல் கொடுத்து, தேர்த லுக்கு ஆறு மாதங்களுக்கு முன்பு ஆட்சியைவிட்டு வெளியேறு வதில் தவறு ஒன்றும் இல்லை. குடி ஒன்றும் முழுகிவிடாது. அண்டை ராஜ்யத்தில் ஜனநாயக முறையில் தேர்தல் நடந்து, கம்யூனிஸ்டு ஆட்சி நடந்தது. பிறகு கிளர்ச்சி நடந்தது. அதைக் காங்கிரஸ்காரர்கள் யாரும் ஆட்சேபிக்கவில்லை. பிறகு, அங்கே ராஷ்டிரபதி ஆட்சி வந்தது. ஆறு மாதம் சென்றது.

[Sri T. L. Sasivarna Thevar] [23rd January 1961]

அதன்பிறகு மீண்டும் தேர்தல் நடந்தது. காங்கிரஸ் ஆட்சி நடைபெறுவிட்டாலும், ஒரு அறைகுறை ஆட்சியாவது நடக்கிறது. ஆகவே, தேர்தலுக்கு ஆறு மாதத்திற்கு முன் அதிகாரத்திலிருந்து வெளியேறி, மக்கள் அபிமானம் இருந்தால் மீண்டும் பதவி ஏற்று ஆட்சி செய்யலாம். இது நியாயமான கோரிக்கை, தருமமான கோரிக்கை. இதை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

திட்டம் சம்பந்தப்பட்டமட்டில் எனக்கு முன்பு பேசிய நண்பர் திரு. கரையாளர் அவர்கள் கேட்டார்கள், எந்த அடிப்படையில் பணம் ஒதுக்கப்படுகிறது என்று. அவர் குறிப்பிட்ட புள்ளிவிவரத்தோடு இரண்டு சொன்னார்கள். கேரளாவுக்கும் ஓரிசாவுக்கும் மட்டும் ஜாஸ்தி வெட்டு இல்லாமல் அவர்கள் கேட்ட தொகை கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த இரண்டு மாகாணத்தில் திட்டத் தொகையில் வெட்டு இருந்தால் ஒருவேளை தேர்தலில் கை விட்டுவிடுமோ என்ற பயம் இருக்கிறது. ஆரம்பத்திலிருந்து திட்டக் கமிஷன் வரையில் அரசியல் வேலை செய்கிறதே தவிர, நியாயம் வேலை செய்யவில்லை. அரசியல் காரணமாக நம்முடைய ராஜ்யத்திட்டங்களுக்கான தொகை குறைக்கப்பட்டிருக்கிறது. கேரளாவிலும் ஓரிசாவிலும் காங்கிரஸ் ஆட்சி வருமோ வராதோ என்ற சந்தேகத்தோடு அங்கே நிறைய தொகை ஒதுக்கிக் கொடுக்கிறார்கள். அரசியல் காரணமாகத்தான் பாகுபாடு செய்யப்படுகிறதே தவிர, நியாய பூர்வமாக இந்த வெட்டு செய்யப்படவில்லை என்பதை இங்கே ஞாபகப்படுத்துகின்றேன்.

தமிழ்நாடு சம்பந்தப்பட்ட வரையில், திட்டம் சம்பந்தமாக எத்தனையோ காரியங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. கிழக்கு இராமநாதபுரம் பகுதியில் அப்பர் பெரியார் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். தூத்துக்குடித் துறைமுகத் திட்டம் எடுத்துக்கொள்வதுபற்றி சந்தோஷம். அத்துடன் இணைந்த சேதுசமுத்திரத் திட்டத்தையும் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், தூத்துக்குடித் துறைமுக விஸ்தரிப்பினால் மட்டும் நன்மை இல்லை என்பதை நினைவூட்டுகின்றேன். இவ்விரண்டையும் இணைத்துக் காரியங்கள் செய்தால்தான் நாட்டுக்கு நலம் ஏற்படும்.

கைத்தொழில் பேட்டைகள் (இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகள்), ட்ரேட் ஸ்கூல்கள் இவைகளை முடிந்த அளவு கிராமப் பகுதியில் வைக்கவேண்டும். மீண்டும் மீண்டும் நகரத்திலேயே வைத்துக் கொண்டிருந்தால், கிராமங்கள் கொஞ்சங்கொஞ்சமாக க்ஷீணித்து விடும். கிராமங்களில் வேலை வாய்ப்பு இல்லாததால், கிராமங்களை விட்டு மக்கள் நகரங்களுக்குச் சென்று கொண்டிருக்கிறார்கள். அதனால், கிராமங்களில் வேலைக்கு ஆள் கிடைப்பது துர்லபமாக இருக்கிறது. ஆகவே, இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகள், ட்ரேட் ஸ்கூல்கள் இவைகளை கிராமப் பகுதியில் வைக்க அரசாங்கம் ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பிரசங்கத்தை முடித்துக்கொள்கின்றேன். வணக்கம்.

23rd January 1961]

**Sri K. PONNAIAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அவருடைய உரையில் கடந்த நவம்பர் மாதத்தில் பெய்த மழையைப் பற்றியும், அதனுல் பல இடங்களில் சேதம் விளைந்ததைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிருர்கள். சேதம் ஏற்பட்ட பகுதிகளில் எங்கள் பகுதியும் ஒன்ருகும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். வால்பாறை பிராந்தியத்தில் மலைப் பிராந்தியப் பகுதியில் உள்ள 'காட்' ரோடு இரண்டு மூன்று பர்லாங்கு தூரம் பாதிக்கப்பட்டு வெளியுலகத் தொடர்பே இல்லாமல் ஒரு வார காலமாக எங்கள் பகுதி மக்கள் திண்டாடிக் கொண்டிருந்தோம். எங்கள் பிராந்தியம் தொழிலாளர் பிராந்தியம். கலெக்டர் அவர்கள் உடனடியாக அந்தப் பிராந்தியத்திற்கு ஆயிரம் மூட்டை அரிசி கேரளம் வழியாகக் கொடுத்தார்கள். அதற்காக கலெக்டருக்கு, சர்க்கார் மூலமாக, எங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அந்த இடத்திற்கு வேறு ரோடு மார்க்கம் கிடையாது. அந்த ரோடை அகலப்படுத்த வேண்டும், அல்லது வேறு ரோடு போட்டுக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கின்றேன். 'காட்' செக்ஷனுகையால் எங்களைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. பல திருப்பங்கள், பல வளைவுகள் இருப்பதால், இனி மழை பெய்தால் என்ன ஆகுமோ என்று இன்னும் பயந்து கொண்டிருக்கிருேம். கனம் அமைச்சர் அவர்களும் அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் நேரில் அதைப் பார்த்தார்கள். ஆவன செய்வதாக உறுதி தந்தார்கள். அதைச் சீக்கிரம் முடித்துக் கொடுக்கும்படி கனம் அமைச்சர் அவர்களை வேண்டிக்கொள்கின்றேன்.

என்னுடைய பிராந்தியத்தில் பாம்பிக்குளம்-ஆளியாறு திட்டம் உருவாகியிருக்கிறது. சோலையாறு டிவிஷனை வால்பாறை டிவிஷனுக்கு மாற்றியிருக்கிருர்கள். அந்தப் பிராந்தியத்தில் பல ஊர்களிலிருந்து வேலைக்கு வருவதால், நியாய விலைக் கடைகள் ஆரம்பிக்க வேண்டும். இன்றைக்கும் இருக்கிறது. ஆனுல், கொடுக்கக்கூடிய தானியம் கட்டுப்படியாவது இல்லை. குறைந்தது பத்து மூட்டை அரிசி, ஐந்து மூட்டை கோதுமையாவது கொடுக்க வேண்டும். கீழ்நாட்டில் என்ன விலைக்கு விற்கிருர்களோ அந்த விலைக்கு அந்தப் பகுதிக்கும் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கின்றேன்.

அடுத்தபடியாக திட்டப்பகுதியில் அணைக்கட்டு வேலையை ஆரம்பிக்கும்போதே கூடத்தொடர்ந்து மீன் வளர்ப்புப் பண்ணையையும், பால் பண்ணையையும் அங்கு ஆரம்பித்தால் நலம் என்ற என்னுடைய யோசனையை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அணைக்கட்டின பிற்பாடு அவற்றுக்கு முயற்சி செய்யலாம் என்ருல் அதற்குப் பிறகு மூன்று நான்கு வருஷங்கள் ஆகும். அதனுல் ஜனங்களுக்கும் பிரயோசனம் இல்லை, மன வருத்தம், பணம் கஷ்டம். ஆகவே அணைக்கட்டு வேலையோடு தொடர்ந்தே

[Sri K. Ponnaian] [23rd January 1961

மீன் வளர்ப்புப் பண்ணையையும், பால் பண்ணையையும் தொடங்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்று. திட்டப் பகுதியில் அட்மினிஸ்ட்ரேட் ஆபீஸ் எக்ஸிக்யூடிவ் ஆபீஸ் என்று பற்பலக் கட்டிடங்களைக் கட்டுகிறார்கள். திட்டவேலை முடிந்த பிற்பாடு அந்த இடங்களில் கட்டப்பட்ட இந்தக் கட்டிடங்களுக்கு வேலை இல்லாமல் போகிறது. இக்கட்டிடங்களுக்கு அப்புறம் ஒருவித பிரயோசனமும் அங்கே இல்லாததால் இடிந்து போகத்தான் விட வேண்டியிருக்கிறது. அதற்குப் பதிலாக திட்டப் பகுதிக்கு பக்கத்தில் உள்ள கிராமங்களிலோ, நகரங்களிலோ—இந்தக் காரியாலயத்தைக் கட்டினால் திட்டம் முடிந்த பிறகும் இந்தக் கட்டிடங்களை வேறு காரியத்திற்குப் பயன்படுத்திக்கொள்ள உதவியாக இருக்கும் என்ற என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதோடு திட்டப் பகுதிகளில் பள்ளிக்கூடம் கிடையாது. போஸ்ட் ஆபீஸ் கிடையாது. உதாரணமாக பரம்பிக்குளத் திட்டப் பகுதியை எடுத்துக்கொண்டால் நம்முடைய அரசாங்கம் அங்கே பள்ளிக்கூடம் ஆரம்பிக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். ஆகையால் அங்கு வேலை செய்யும் தொழிலாளர்களின் குழந்தைகள் பாதிக்கப்படுகிறார்கள். திட்டம் நமது, ஆதலால் அங்கு வேலை செய்கிற நம்முடைய தொழிலாளர்களின் குழந்தைகள் நலனுக்காக அங்கே உடனடியாக ஒரு ஆரம்பப் பள்ளியை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதுபோல ஒரு தபால் ஆபீஸ் திறக்கப்படுவதற்கும் வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பரம்பிக்குளத்தில் இருந்து பாலாறு பகுதி வரையில் காண்டூர் கானல் வேலை நடக்கிறது. அங்கே வேலை செய்கிற தொழிலாளர்கள் தினந்தோறும் ஐந்தாறு மைல்கள் நடந்து தங்கள் வீட்டில் இருந்து வரவேண்டியிருக்கிறது. அதனால் காலையில் இரண்டு மணி, மாலையில் இரண்டு மணி வீணாகிறது. வீட்டை விட்டு 7 மணிக்குக் கிளம்பினால் 9 மணிக்குத்தான் வர முடிகிறது. அதுபோல 5½ மணிக்கு வேலையை விட்டு மாலை திரும்பினால் வீட்டுக்கு ஏழு, ஏழரை மணிக்குத்தான் போக முடிகிறது. இதைத் தவிர்ப்பதற்கு அந்தத் தொழிலாளர்களுக்கு கானலை ஒட்டியே ஷெட்டு போட்டுக்கொடுத்தால் நலம். வேலை நடக்க நடக்க இந்த ஷெட்டுகளையும் வேலை நடக்கிற இடத்திற்குத் தகுந்தாற்போல நகர்த்திக் கொண்டே போகலாம்.

மின்சார சக்தியைப் பொறுத்த வரையில் நமது மாகாணம் இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது என்று தெரிகிறது. அப்படி இருந்தும் தொழிலாளர்களுடைய லைன்களுக்கு மின்சார வசதி கிடையாது. வால்பாறைப் பிராந்தியம் முழுக்க முழுக்க தொழிலாளர் நிரம்பிய இடம். முதலாளிகளும் நிரம்ப லாபம் சம்பாதிக்கிறார்கள். தேயிலை தான். ஆனால் தினந்தோறும் சாயந்திரம்

23rd January 1961] [Sri K. Ponnaian]

தொழிலாளர்கள் லேபர் லைனுக்குப் போக வேண்டுமென்றால் பந்தத்தைக் கட்டிக் கொண்டு அங்கே போகவேண்டும். ஆகவே தொழிலாளர்களுடைய கஷ்டத்தை நீக்குவதற்காக தொழிலாளர்கள் லைன்களுக்கு உடனடியாக மின்சார வசதி செய்து கொடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்று. மலைப் பிராந்தியங்களில் வேலை செய்கிற சர்க்கார் சிப்பந்திகளுக்கு, ஸ்தல ஸ்தாபன சிப்பந்திகளுக்கு ஒரு அலவன்சு கொடுத்துவந்தார்கள். உண்மையிலே அங்கு வேலை செய்கிறவர்கள் குளிரினால் கஷ்டப்படுகிறார்கள். தனியாக அவர்களுக்கு கம்பளி உடைகள் பிரத்யேகமாகத் தேவைப்படுகிறது. அதனாலேயே அங்கு யாரும் வேலைக்கு வருவது என்றால் சிரமப்படுகிறார்கள். அங்கு வேலைக்கு என்றால் வருஷத்தில் குறைந்தது 150 ரூபாய் வார்ம் க்ளோத்துக்காக வேண்டியிருக்கிறது. ஆகவே ஹில் அலவன்சு என்றோ வார்ம் க்ளாத் அலவன்சு என்றோ திரும்பவும் அந்த மலைப் பிராந்தியங்களில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகளுக்கு அலவன்சு கொடுக்கவேண்டும் என்பதாக மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். வால்பாறை, ஊட்டி போன்ற இடங்களில் உள்ளவர்களுக்கு எல்லாம் அவசியம் கொடுத்தாகவேண்டும்.

வால்பாறைப் பிராந்தியம் மலைப்பிரதேசம். வருஷத்தில் 150 இன்சுக்கு மேல் அதிகமாக மழை பெய்கிறது. அங்கே நன்றாக வளர்க்கிற கால்நடை சிந்தி. இந்த ரகம் இந்தியாவிலேயே அதிகம் கிடையாது. பாகிஸ்தான் பிரிந்த பிற்பாடு அந்த ரக மாடுகள் இங்கே ஏற்றுமதி ஆவதில்லை. ஆகவே இந்த வால்பாறைப் பிரதேசத்தைப் பொறுத்த வரையில் வேறு மாடுகளை உள்ளே வரக்கூடாது என்றாவது தடைவிதித்துவிட்டு இந்தப் பிராந்தியத்தில் பிரத்யேகமாக சிந்தி வளர்ப்பு நடைபெற்றால்தான் மிகவும் சிறப்பாக இருக்கும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக என்னுடைய தொகுதியில் ஹரிஜனங்களுக்கு ஹவுஸ் சைட் மிகவும் பூஜ்யம் ஆக இருக்கிறது. சர்க்காரிடம் பலமுறை எடுத்துச் சொல்லியிருக்கிறேன். எங்களுக்கு மாடு வாங்கப் பணம், விதை வாங்கப் பணம் என்று பலவகையில் ஒத்தாசை செய்வதை கொஞ்ச காலத்திற்கு குறைத்துக்கொண்டாவது வீட்டு மனை வாங்கித் தரவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். கடந்த மூன்று நான்கு வருஷங்களாகவே குடியிருப்பு மனை கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. நில ஆர்ஜிதம் செய்வதில் எத்தனையோ தகராறு. எங்களால் லாண்டு அக்விசிஷன் சட்டத்தை அமுலாக்க முடியவில்லை. ஆகவே அங்குள்ள தரிசு நிலங்கள், இன்னும் இதர பூமிகள் இவற்றைப் பார்த்து அங்குள்ளவர்களுக்கு ஹவுஸ் சைட் உடனடியாக வழங்கி அவர்களுக்கு வாழ்வு அளிக்க உடனடியாக முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

1-27 p.m. DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.

V.—PAPERS PLACED ON THE TABLE OF THE HOUSE.

**A.—Statutory Rules and Orders**

143. *Notification issued with G.O. Ms. No.* 4938, *Industries, Labour and Co-operation (Labour), dated 26th October* 1960 *regarding the appointment of Inspectors for the purposes of the Madras Industrial Establishments (National and Festival Holidays) Act*, 1958 [*Laid on the Table of the House under section* 12 (3) *of the Madras Industrial Establishments (National and Festival Holidays) Act*, 1958 (*Madras Act XXXIII of* 1958).]

144. *Notification issued with G.O. Ms. No.* 3943, *Home, dated* 1*st December* 1960 *under the Madras Motor Vehicles Taxation Act*, 1931 [*Laid on the Table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act*, 1931 (*Madras Act III of* 1931).]

145. *Notification regarding the powers delegated to the Regional Inspector of Municipal Councils and Local Boards in Thanjavur district* [*Laid on the Table of the House under section* 113 (4) *of the Madras Village Panchayats Act*, 1950 (*Madras Act X of* 1950.)]

**B.—Reports, Notifications and other papers.**

36. *Amendments to Rules* 18 *and* 20 *of the Madras Factories Rules*, 1950 *issued in G.O. Ms. No.* 3771, *Industries, Labour and Co-operation (Labour), dated* 1*st August* 1960 *under the Factories Act*, 1948 (*Central Act LXIII of* 1948).